# வான சஞ்சாரம்

"இசைத் தேனீ"

[ஆசிரியர் குறிப்பு :—"இசைத் தேனீ"யின் வான சஞ்சார விமரிசனத்தில் ஏற்பட்ட பெயர் மாறாட்டத்தைக் குறித்துச் சென்ற இதழில் வெளியான ஆசிரியர் குறிப்பை நேயர்கள் படித்திருப்பார்கள். "இசைத் தேனீ"யிடமிருந்து பதில் வருவதற்கு முன்னாலேயே மேற்படி பிழைக்கு உண்மைக் காரணம் நமக்குத் தெரிந்து போய்விட்டது. அகில உலக நாதஸ்வரச் சக்கரவர்த்தியின் பின்வரும் கடிதத்தின் மூலம் அது தெரிந்தது:—

"அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு, உபய க்ஷேமம். சென்ற ரேடியோவில் (திருச்சியில்) என் மருமகனும் சிஷ்யனுமான டி. என். ஆர். நடராஜ சுந்தரத்தைத் தான் போட்டிருந்தது. திடீரென்று மருமகனுக்கு ஜுரம் கண்டபடியால் நான் போகும்படியாக நிகழ்ந்தது. போய்வந்தேன். ஆனால் நமது உயரிய மதிப்பு வாய்ந்த "கல்கி"யில் நடராஜ சுந்தரம் வாசித்தார் என்று இருந்தது. எங்கள் வீட்டாரெல்லாரும் நமது ஸ்ரீ ஆசிரியர் அவர்கள் கேட்கவில்லை என்று நிர்மாணித்தார்கள். இன்று "கல்கி"யில் தங்கள் அன்பை வெளியிட்டு விட்டீர்கள் ... மறுபடியும் அக்டோபர் 20உ இரவு 8 மணி முதல் 9-20 வரையில் என் நாதஸ்வரக் கச்சேரி உண்டு...

இங்ஙனம்,
டி. என். ராஜரத்தினம்.
ஸ்ரீ ஸ்வாமி நாத ஸ்வாமி துணை."

தெரிந்ததா விஷயம்? சிஷ்யருக்குப் பதிலாக அன்று குருவே வாசித்திருக்கிறார்! வாசிப்பின் பாணி குருவுக்கும் சிஷ்யருக்கும் ஒரே மாதிரிதான் இருக்குமென்று சொல்ல வேண்டியதில்லை யல்லவா? ஸ்ரீ நடராஜ சுந்தரம் பிள்ளை, ஸ்ரீ ராஜரத்தினத்தின் சிஷ்யர் என்பது "இசைத்தேனீ"க்குத் தெரியும். ஆகவே, வாசிப்பு குருவின் பாணியாக இருந்ததுபற்றி அவருக்கு ஆச்சரியம் ஏற்படவில்லை. வாசிப்பு உயர்தரமாக இருந்ததிலும் அவருக்கு வியப்பு உண்டாகவில்லை. ஆகையினால்தான், "ஜமாவாயிருந்த தென்று சொல்லத் தேவையில்லை" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

வானொலியில் குறிப்பிட்டவருக்குப் பதில் ஸ்ரீ ராஜரத்தினம் வாசிக்கிறார் என்னும் அறிவிப்பை "இசைத் தேனீ" கவனிக்கவில்லை. அதை நான் உள்பட இன்னும் அநேகரும் கவனிக்கவில்லை. உண்மையில், இப்படி ஒரு அகில உலக நாதஸ்வர சக்கரவர்த்தியைத் திடீரென்று இன்னொருவருக்குப் பதிலாக வாசிக்கச் செய்தது பற்றி எனக்குத் திருச்சி நிலையத்தின் பேரில் கோபமாயிருக்கிறது. ஏனென்றால், ஸ்ரீ ராஜரத்தினம் ரேடியோவில் வாசிக்கிறார் என்று முன்னதாகத் தெரிந்திருந்தால் நானே அதைக் கேட்கத் தவறியிருக்க மாட்டேன். ஒன்றே கால் மணி நேரம் பூலோகத்தி லிருந்து சொர்க்கத்துக்குக் கொண்டு போகிறேன் என்றால், அதை வேண்டாமென்று யார் தவற விடுவார்கள்?

மேற்படி நஷ்டத்துக்குப் பரிகாரமாக அடுத்த அக்டோபர் 20உ ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளையின் கச்சேரியை இரவு 7-55 முதல் 9-25 வரை கேட்டு விடுவதென்று தீர்மானித்திருக்கிறேன். "இசைத் தேனீ"யும் கேட்பார் என்பதில் சந்தேகமில்லை.

கடைசியாக ஒரு வார்த்தை. "இசைத் தேனீ"யின் அரிய சங்கீதக் கருத்துக்கள் அடங்கிய விமரிசனங்களைப் பாராட்டிப் பல நேயர்கள் நமக்கு எழுதியிருக்கிறார்கள். "ஐயோ! நிறுத்தி விடாதீர்கள்!" என்று இந்த வாரத்திலும் பல கடிதங்கள் வந்திருக்கின்றன. "இசைத் தேனீ" மிகவும் பொறுப்புள்ள மற்றொரு பதவியில் இருந்து திறம்பட வகித்து வருகிறவர். அதற்கிடையில் அவர் எவ்வளவோ அருமையான காலத்தைச் செலவிட்டுச் சிரத்தையுடன் கேட்டு எழுதும் வானசஞ்சாரக் குறிப்புகள் "கல்கி"யில் வழக்கம்போல் வெளியாகி வரும்.]

★ ★ ★

● சங்கீதத்தை ஆத்மார்த்தமாய்ப் பயின்று சிறப்பிக்கும் பெண்மணிகளில் மீனாக்ஷி ராமகிருஷ்ணன் ஒருவர் என்பது அவர் இம்மாதம் 12உ சென்னை ரேடியோ நிலையத்தில் பாடியதிலிருந்து தெளிவாயிற்று. நயமான குரல்; கமக பூர்வமான சாதகம்: நிதானம் கொண்ட மனோபாவம். பிரமிக்கத் தக்க வேலைப் பாடுகளில்லாவிடினும் கேட்டதெல்லாம் கனிசமாயிருந்தன.

14உ மாலை திருச்சியில் டி. எம். தியாகராஜன் செய்த கச்சேரி ஜமாவாயிருந்தது.

திருச்சிக் கச்சேரியில் தந்தி யடித்து இடம் ரிஸர்வ் செய்து கொண்ட மதுரை ஜில்லா பட்டி வீரன்பட்டி நண்பர்தான். நூறு நூறு ரூபாய்க்கு டிக்கெட் வாங்கிக் கொண்டு மூன்று கஸ்தூரிபா கச்சேரிகளை இவர் கேட்டார். பணம் படைத்த பயனை அடைந்த பாக்கியசாலி.

நிதி வசூலுக்குத் தகுந்தபடியும், தஞ்சாவூர் சபைக்கு ஏற்ற வண்ணமும் தான் அன்றைக்குக் கச்சேரியும் அமைந்தது.

பந்துவராளி, கரகரப்ரியா, சங்கராபரணம், கல்யாணி, தோடி ஆகிய பெரிய ராகங்களாகவே எடுத்துக் கொண்டு பாடி ஆலாபனம் செய்தார். இந்தப் பழைய கர்நாடக ராகங்கள், அவரிடமே பல தடவை கேட்டவையாயினும், அன்று புதிய தோற்றத்துடன் விளங்கின. அப்படி நவ நவமான மனோதர்ம கற்பனைகள் அலைமோதிக் கொண்டு வந்தன. செவி இன்பத்துக்கு இது தான் எல்லை யென்று சொல்லும்படி யிருந்த பாடகியின் குரல் பூலோகத்திலிருந்து ககன மண்டலம் வரையில் அநாயாசமாக வட்டமிட்டுச் சஞ்சரித்தது.

கல்யாணி ராகத்தில் தஞ்சாவூர் ராஜாவின் பணத்தைத் திரணமாக மதித்துத் தியாகய்யர் பாடிய "நிதி(ச்)சால சுகமா?" கீர்த்தனம், இடத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் வெகு பொருத்தமாயிருந்தது. சங்கராபரணத்தில் "யாரோ என்றெண்ணாமலே" கீர்த்தனைதான். இவ்வளவு உயர்ந்த கச்சேரியில் "காலைத் தூக்கி நின்று ஆடும் தெய்வ"த்தைப் பாடாமல் விட முடியுமா? தமிழ் ஸாஹித்யங்களுக்குள்ளே மிகச் சிறந்ததும், ராகபாவத்தில் இணையற்றதுமான அந்த யதுகுல காம்போதி கீர்த்தனை அன்று வாய்த்த விதமும் இணையற்றதாய், "சிந்தை மகிழ்ந்து வானோர் சென்னி மேல் கரம் தூக்க" வேண்டியதாயிருந்தது.

தோடி ஆலாபனையில் சில அபூர்வ பிடிகள், சபையையே குலுக்கி விட்ட பிடிகள், வெளியாயின. பல்லவி விஸ்தாரத்தில் ராகமாலிகை ஸ்வரம் பாடும் போது, கானடாவில் "சிப்பமபகா" என்று பிடித்ததும், டவர் டாக்கிக் கொட்டகைக்கு ஆபத்து வந்து விட்டதாகக் காணப்பட்டது! சபையில் அவ்வளவு குதூகலம்.



கடைசியில், "காந்தி மகாத்மா! நீ வாழ்க! வாழ்க! வாழ்க!" என்று மூன்று தடவை வாழ்த்தி முடித்தபோதும் சபையோரின் ஆரவார கரகோஷத்தினால் கொட்டகைக்கு மற்றொரு கண்டம்!

ஆறே முக்கால் மணிக்கு ஆரம்பமான கச்சேரி, பதினொன்றரைக்கு முடிவடைந்தது. இடையில் அரை மணி நேரம் பேச்சுக் கச்சேரிகள். ஆயினும், சாயங்காலம் ஐந்து மணியிலிருந்து கூடியிருந்த அந்த மகத்தான சபையானது, பதினொன்றரை மணிக்குக் கூட எழுந்திருக்க மனமில்லாமல், மங்களம் பாடிய பிறகும் எழுந்திராமல் உட்கார்ந்திருந்தது. மங்களம் பாடி முடியும் வரையில் சபை கலையக் கூடாது என்று மியூஸிக் அகாடமியில் அடிக்கடி சொல்லப்படும் யோசனையை மேற்படி தஞ்சாவூர் சபைதான் நன்கு நிறைவேற்றி வைத்தது. சென்னை நகரப் பழக்கத்தினால், முதன் முதலாக அச்சபையில் எழுந்திருந்த ஆசாமி நான்தான். மற்றவர் யாரும் எழுந்திராததைப் பார்த்து நானும் பேசாமல் உட்கார்ந்து விட்டேன்!

★

முந்தைய நாலு கச்சேரிகளிலும் பக்க வாத்தியங்கள் வாசித்த பிடில் சங்கரய்யர், கல்பாத்தி ராமநாதன், மதராஸ் வேணு நாயக்கர் ஆகியவர்கள்தான் இந்தக் கச்சேரியிலும் பக்க வாத்தியக் கைங்கரியம் செய்தார்கள். இவ்வளவு குதூகலமான சபையில், இவ்வளவு பிரமாதமான கச்சேரியில், பக்க வாத்தியக்காரர்களும் அளவில்லா உற்சாகத்துடன் வாசித்தது, கச்சேரி சோபிப்பதற்குப் பெரிதும் காரணமாயிருந்தது. மிருதங்கமும் கஞ்சிராவும் சேர்ந்து முதல் தடவை பன்னிரண்டு நிமிஷம் ஆவர்த்தனம் வாசித்த பிறகும் சபை அலுப்படையாமல் அநுபவித்தது. இருவரும் ஆவர்த்தனத்தை முடித்த

போது, "முடிந்து விட்டது" என்று சபைக்குத் தெரியாமலே முடிந்து விட்டார்கள். அது தெரிவதற்கு அரை நிமிஷம் ஆயிற்று. அதற்குப் பிறகு சபையோர் விழுந்தெழுந்து பிரமாத கரகோஷம் செய்து பாராட்டினார்கள் என்றால், பார்த்துக் கொள்ளுங்கள்.

★

கச்சேரியின் நடுவில் அரை மணி நேரம் நடந்த பேச்சுக் கச்சேரியில் ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளையும், ஸ்ரீ வேதரத்தினம் பிள்ளையும் முக்கிய பங்கெடுத்துக் கொண்டார்கள். இரண்டு பேரும் வெகு அழகாகவும் மிகப் பொருத்தமாகவும் பேசினார்கள். அன்றையப் பாட்டின் பெருமையைப் பற்றியும் தஞ்சாவூர் நாட்டின் பெருமையைப் பற்றியும் மாற்றி மாற்றிப் பெருமையடித்துக் கொண்டார்கள். பெருமையடித்துக் கொள்ள அவர்களுக்குக் காரணம் இருக்கத்தான் இருந்தது. கால தேச வர்த்தமானங்களை முன்னிட்டுத் தஞ்சாவூர் ஜில்லாவில் மொத்தம் 65 ஆயிரம் ரூபாய் வசூலாக வேண்டுமென்று கஸ்தூரிபா நிதிக் கமிட்டியார் பங்கு பிரித்துக் கொடுத்திருந்தார்கள். ஆனால், அன்று வரையில், கச்சேரி வசூலைச் சேர்க்காமலே ரூபாய் 91,000 வசூலாகியிருந்ததாம். ஒரு மாதம் தீவிரமாக வேலை செய்ததின் பயன் இது. மாத முடிவிற்குள் ஒன்றரை லட்சமாவது ஆக்கிவிட வேண்டுமென்றும், ஆக்கிவிடப் போவதாகவும் தஞ்சாவூர்த் தலைவர்கள் மார் தட்டிக் கொண்டு பேசினார்கள். அப்போதே ஒருவர் கையில் தட்டை எடுத்துக் கொண்டு கிளம்பிவிட்டால், அந்தச் சபையில் இருந்தவர்களே பாக்கித் தொகை இட்டு நிரப்பி விடுவார்கள் என்று தோன்றியது. சபையில் அவ்வளவு குதூகலம் காணப்பட்டது.

அந்தக் குதூகலமானது இன்னும் ஒரு சந்தர்ப்பத்திலும் நன்கு வெளியாயிற்று. கஸ்தூரிபா நிதிக் கமிட்டியின் காரியதரிசி ஸ்ரீ எஸ். என். கோபாலஸ்வாமி, ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் ஐந்து கச்சேரிகளிலும் வசூலான தொகைகளைத் தனித் தனியாகத் தெரிவித்து விட்டு, மொத்தம் ரூபாய் 80,026 என்று தெரியப்படுத்தினார். பிறகு இப்பேர்ப்பட்ட தர்ம கைங்கரியத்தை ஒப்புக் கொண்டு நடத்திக் கொடுத்த பாடகிக்கு, ஒவ்வொரு கச்சேரிக்கு ஒவ்வொரு மாலை வீதம் ஐந்து ஜில்லாக்களின் சார்பாகவும் ஐந்து மாலைகளை வெகுமானமாக அளித்தார்! ஒவ்வொரு தடவையும் சபையோரின் முகமலர்ச்சியும் ஆரவாரமும் எம். எஸ். வின் கைங்கரியத்தை அவர்கள் எவ்வளவு தூரம் பாராட்டுகிறார்கள் என்று தெரிவித்தது.

உண்மையில், பாராட்டத்தக்க விஷயம் தான்; தமிழ் நாடே பெருமைப் படக்கூடிய காரியந்தான்.

நாளைய தினம் மகாத்மா காந்தியிடம் சமர்ப்பிக்கப் போகும் சுமார் 80 லட்சம் ரூபாயில் தமிழ்நாடு பத்தில் ஒரு பங்கு கொடுத்திருக்கிறது. அதில் பத்தில் ஒரு பங்கை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி தமது கச்சேரிகளின் மூலம் அளித்திருக்கிறார்.

"இந்தமாதிரி இந்தியாவில் வேறெங்கும் இல்லை; உலகத்திலேயே கிடையாது" என்றார் சர்தார் வேதரத்தினம் பிள்ளை.

இத்தகைய ஒரு பாடகியைப் பெற்றிருப்பது குறித்துத் தமிழ் நாடு பெருமை கொள்வதில் எவ்விதத் தவறும் இல்லை.

---

## பம்பாயில் காந்திஜி

1. பம்பாயில் காந்திஜி தங்கியிருந்த பிர்லா மாளிகை.

2. "பிரார்த்தனைக்குக் கிளம்பியாகிவிட்டதா?"

3. ஆம்; இதோ புறப்பட்டு விட்டார்!

4. மெல்ல நடக்கும் வழக்கம் மகாத்மாவிடம் கிடையாது.

5. பிரார்த்தனைக்குக் கூடியிருக்கும் மாபெருங் கூட்டம்.

6. பிரார்த்தனைக் கூட்டத்தின் இன்னொரு தோற்றம்.

7. தெரிந்தவர்கள் யாராவது இருக்கிறார்களா? கண்டு பிடியுங்கள், பார்க்கலாம்! ஆமாம்; நமது மானேஜரும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியுந்தான். பம்பாய்க்கு வேறு காரியமாகப் போன இடத்தில் இந்த பாக்கியம் அவர்களுக்குக் கிடைத்தது.

8. பிரார்த்தனைக்கு வந்த ஏநாட்டு ஒருவரிடம் மகாத்மா பரிசு பெற்றுக் கொள்கிறார்.

9. பிறகு, விடை பெற்றுக் கொள்கிறார். (கொஞ்சம் கூர்ந்து பார்த்தால் காமிராவும் கையுமாக நமது போட்டோக்காரரையும் படத்தில் காணலாம்.)



# ஆடல் பாடல்



## “கர்நாடகம்”

தஞ்சாவூரின் அஞ்சாவது அதிசயத்தைப் பற்றிக் கேள்விப் பட்டிருப்பீர்கள். ஒரு வேளை மூன்றாவது அதிசயம் என்று சொல்வது அதிகப் பொருத்தமா யிருக்கலாம். தஞ்சாவூரில் ஏற்கெனவே பெரிய கோயிலும், அந்தக் கோயிலில் பெரிய நந்தியும் தமிழர் பழம் பெருமைக்கு அழியாத சின்னமான இரு பெரும் அதிசயங்களாக விளங்குகின்றன. மூன்றாவது அதிசயம், சென்ற ஞாயிற்றுக் கிழமை அங்கு நடந்த ஒருசங்கீதக் கச்சேரிக்கு ரூ. 26,026 (இருபத்தாறாயிரத்து இருபத்தாறு ரூபாய்) வசூலான அதிசயமாகும்.

இந்த அதிசயம் எப்படிச் சாத்தியமாயிற்று என்பதற்கு மூன்று காரணங்களை ஸர்தார் வேதரத்தினம் அன்று வெகு அழகாக எடுத்துச் சொல்லி முத்தாய்ப்பு வைத்தார்.

“நிதி, கஸ்தூரிபா நிதி; கச்சேரி, ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி; ஊர், தஞ்சாவூர். இந்த மூன்றில் ஒன்று குறைவாக இருந்திருந்தாலும் இப்பேர்ப்பட்ட அதிசயம் நடந்திராது” என்றார்.

அதிசயமோ, அதிசய மில்லையோ, தஞ்சாவூர் ஜில்லாவைப்பற்றிய என்னுடைய நம்பிக்கை மெய்யானதுபற்றி அளவில்லாத மகிழ்ச்சி அடைகிறேன். “தஞ்சாவூரில் நடக்கும் அஞ்சாவது கச்சேரி பண வசூலிலும் பாட்டின் சிறப்பிலும் சிகரமாக விளங்குமென்று எதிர் பார்க்கிறேன்” என்று எழுதி யிருந்தேன். அது பிரமாதமான முறையில் ருசுவாகி விட்டது. வசூலான இருபத்தாறாயிரம் ரூபாயோடு கூட, அன்று டவர் டாக்கியின் உள்ளேயும் பக்கங்களிலும் வாசலிலும் நெருக்கிக் கூடி யிருந்த ஆயிரக் கணக்கான ஜனங்களும் நிரூபித்தார்கள். இரண்டு ரூபாய் முதல் நூறு ரூபாய் வரையில் டிக்கெட் வாங்கிக்கொண்டு நாலாயிரம் பேர் சங்கீதம் கேட்க வரும் விந்தையை தஞ்சாவூரிலே தவிர வேறு எங்கே பார்க்க முடியும்?

இந்தக் கொண்டாட்டத்தினிடையே சில நண்பர்களைப் பற்றி நான் இதுவரை அறிந்திராத பூர்வோத்தர இரகசியங்கள் தெரிய வந்தன! எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த திருச்சி நண்பர் ஒருவர், ரூபாய் வசூலைப் பற்றி அறிவிக்கப்பட்டதும், “தஞ்சாவூர் ஜில்லா எப்படி?” “எப்படி தஞ்சாவூர் ஜில்லா?” என்று அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தார். தொந்திரவு பொறுக்காமல் நான், “நீர் திருச்சிக்காரர்; தஞ்சாவூரைப் பற்றிய பெருமை உமக்கு என்ன?” என்று கேட்டேன்.

“என்ன சொன்னீர்? நான் அசல் தஞ்சாவூர்க்காரன், ஐயா! இன்ன தாலூகா, இன்ன வட்டம், இத்தனாம் வருஷத்து ஜனன மரணக் கணக்கை எடுத்துப் பார்த்து விட்டு அப்புறம் வேறு பேச்சுப் பேசும்!” என்றார்.

இத்தனை நாளும் லால்குடிக்காரர் என்று நான் எண்ணி யிருந்த ஒருவர், “என் தாயாருக்குத் திருக்காட்டுப் பள்ளிக்கு ஏழு மைலில் உள்ள கிராம மாக்கும். அங்கே எனக்கு இரண்டரைக் காணி நிலங்கூட இருக்கிறது” என்றார்.

“எனக்கும் கொள்ளிடத்தில் ஆறு ஏக்கரா மணல்மேடு சொந்தம்” என்றார் இன்னொருவர்.

இப்படித் தஞ்சாவூர்க்காரர் என்று சொல்லிக் கொள்வதிலேயே எல்லாருக்கும் பெருமையும் உவகையும் உண்டாகி விட்டது.

இதிலிருந்து தேச பக்தியும் சங்கீதாபிமானமும் தஞ்சாவூருக்குள்ளேயே அடங்கிப் போய்விட்டதாக நான் சொல்ல வில்லை.

மேற்படி தொகையிலேகூட அயல் ஜில்லாக்காரர்களின் பணமும் சேர்ந்துதானிருந்தது. இது எப்படித் தெரிந்தது என்றால், பாடகி பந்துவராளி ராகத்தை அமோகமான புதுப் புது கற்பனைகளுடன் பாடிச் சபையின் சந்தோஷத்தைப் பெற்றதும், என் பின்னாலிருந்து, “நீங்கள் எழுதி யிருந்தது சரியாய்ப் போச்சு; திருச்சியையும் மதுரையையும் இந்தக் கச்சேரி தூக்கி அடித்து விட்டது!” என்று ஒரு குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தால்,

அ:—மகாத்மா என்றால்? அவர் அப்படி என்ன காரியத்தில் வெற்றி யடைந்திருக்கிறார்?

இ:—அவர் எடுத்த காரியம் ஒன்றி லும் வெற்றி யடையவில்லை. இன்னும் தேசம் சுயராஜ்யம் அடையவில்லை. ஜனப் ஜின்னாவைக் கூட அவரால் சரிப் படுத்த முடியவில்லை.

அ:—அப்படித் தோல்வி யடைந்த மனிதரை எதற்காக இவ்வளவு ஜனங்கள் இப்படிப் போற்றுகிறார்கள்?

இ:—தோல்வியானால் என்ன? வெற்றியானால் என்ன? மகாத்மா வின் உயர்ந்த குணங்களுக்காக அவ ரைப் போற்றுகிறார்கள். அவருடைய உத்தம வாழ்க்கைக்காகப் போற்று கிறார்கள். அவர் கைக்கொள்ளும் சிறந்த முயற்சிகளுக்காகப் போற்றுகிறார்கள். தம்முடைய குறையைத் தாமே ஒத்துக் கொண்டு, தம்முடைய தோல்வியைத் தாமே எடுத்துக் கூறும் தலைவரை வேறு எந்த நாட்டில் காண முடியும்?

அமெரிக்கர்:—ஆஹா! உங்கள் இந் தியா தேசத்தின் போக்கே ஒரு தனிப் போக்குத்தான்!

இந்தியர்:—ஆகையினால்தான் ஆயி ரக்கணக்கான வருஷங்களாக எங்கள் இந்திய நாகரிகம் அழியாமலிருக்கிறது.

• • •

டாக்டர் அம்பேத்கார் கூறியது: ரொம்ப சரி; ரொம்ப ரொம்ப சரி.

காந்தி மகாத்மா தமது வாழ்நாளில் எத்தனையோ தோல்விகள் — தோல் விக்கு மேல் தோல்விகள் — அடைந்து வந்திருக்கிறார். அந்தத் தோல்விகளைக் கூசாமல் ஒப்புக்கொண்டும் இருக்கிறார்.

ஆனால், மற்றவர்கள் அடைந்த வெற்றிகளைக் காட்டிலும் மகாத்மா வின் தோல்விகளினால் இந்தியா தேசம் அதிக நன்மை யடைந்திருக்கிறது. இனிமேலும் அடையப் போகிறது.

"ஆம் ஆம்" என்று இதோ மணி யும் அடிக்கிறது.

எனவே, தோல்விக்கு மேல் தோல்வி யடைந்த போதிலும் மகாத்மா காந்தி தான் நமது தலைவர்!

அவர்தான் நமது சிரஞ்சீவித் தலைவர்.

அவராலேதான் இந்தியா தேசம் வாழ்வும் கௌரவமும் அடையப் போகிறது.



சரித்திரப் பெருமை வாய்ந்த தஞ்சாவூர் சங்கீதக் கச்சேரி. ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளை அவர்களின் கையில் உள்ள பையில் இருப்பது, கஸ்தூரிபா நிதிக்குக் கச்சேரியில் வசூலான ரூ. 26,026.

பிரானிஷ், ருன்ஸ்டெட் முதலிய எத்தனையோ பேர் தோல்வி நேர்ந்ததும் கழுத்தைப் பிடித்துத் தள்ளப் பட்டார்கள்!

கடைசியாக, ஹிட்லரின் கதியும் அதோகதியாகத்தான் ஆகப் போகிறதென்பதில் சந்தேகமில்லை.

தோல்வி யடைந்தவர்களின் கதி ஒருபுற மிருக்கட்டும். வெற்றி யடைந்தவர்களின் வாழ்வு தான் எத்தனை நாளைக்கு என்று நினைக்கிறீர்கள்?

லாயிட் ஜார்ஜ், பிரஸிடெண்ட் வில்ஸன், கிளமென்ஸோ முதலியவர்களின் கதி என்ன ஆயிற்று?

சர்ச்சில், ரூஸ்வெல்ட் ஆகியோர் இன்றைக்கு நாலைந்து வருஷத்துக்குப் பிறகு என்ன நிலைமையில் இருக்கப் போகிறார்கள்? இதோ 1950-ம் வருஷத்தில் மூன்று காட்சிகளைக் கற்பனை செய்து பார்க்கலாம்:—

## காட்சி 1.

[இடம்: இங்கிலாந்தில் ஒரு மூலை.
பாத்திரங்கள்: வின்ஸ்டன் சர்ச்சிலும் இரண்டு வழிப்போக்கர்களும்.]

முதல் வழிப்போக்கன்:—யார் அப்பா, இது? வாயிலே சுருட்டும் கையில் உருளைக் கிழங்குமாய்!

இரண்டாம் வழிப்போக்கன்:—தெரியாதா உனக்கு? மாஜி பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சில்தான்! வேறு யார் வாயிலிருந்து இவ்வளவு புகை வரும்?

மு. வ:—ஆமாம்; அவர் என்ன செய்து கொண்டிருக்கிறார்? உருளைக் கிழங்கை எடுத்து எடுத்து அந்த மரத்தின்மேல் வீசி எறிந்து கொண்டிருக்கிறாரே, என்னத்துக்கு?

இ. வ:—உருளைக் கிழங்கெல்லாம் பறக்கும் குண்டு என்று அவருக்கு எண்ணம்! அந்த மரந்தான் ஹிட்லர் என்பது அவருடைய பிரமை.

மு. வ:—ஐயோ பாவம்! அவ்வளவு பெரிய யுத்தத்தில் ஜயித்தாரே? அவருக்கு இந்தக் கதியா?

இ. வ:—யுத்தத்தில் ஜயித்து என்ன பிரயோஜனம்? அந்த ஜயத்தைச் சரியாக உபயோகப் படுத்தாமல், சமாதானத்தைக் கோட்டை விட்டார். சமாதானத்தில் உலகத்தில் துவேஷமும் துன்பமும்தான் அதிகமாயின. அடுத்த யுத்தத்திற்கு ஆயத்தங்கள் இதற்குள்ளே ஆரம்பமாகி விட்டன. என்ன ஜயம் வேண்டிக் கிடக்குது?

## காட்சி 2.

[இடம்:—அமெரிக்காவில் ஒரு ஏரி.
பாத்திரங்கள்:—படகில் மாஜி பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட்டும், ஏரிக் கரையில் இரண்டு வழிப்போக்கர்களும்.]

மு. வ:—ஏன், அப்பா! இவர் யார் இந்த மனுஷர்? தண்ணீரில் ஓயாமல் ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறாரே?

இ. வ:—தெரியாதா உனக்கு? மாஜி பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட்! தண்ணீரிலே சாஸனங்கள் எழுதிக் கையெழுத்துப் போடுவதிலே அவருக்கு ரொம்ப ரொம்பப் பிரியம்.

மு. வ:—ஓஹோ! எனக்குக் கூட ஞாபகம் வருகிறது. போன யுத்தத்தின் போது ஏதோ அட்லாண்டிக் சாஸனம் என்று வெளியிட்டார்கள் இல்லையோ?

இ. வ:—அது போதாதென்று இப்போது இவர் இந்த ஏரித் தண்ணீரில் பஸிபிக் சாஸனம், அரபிக் கடல் சாஸனம், செங்கடல் சாஸனம், மத்திய தரைக் கடல் சாஸனம், வங்காளக் குடாக்கடல் சாஸனம் எல்லாவற்றையும் எழுதிக் கொண்டிருக்கிறார்!

மு. வ:—பாவம்! இவர் தலையில் இப்படியா எழுதியிருந்தது? அப்பேர்ப் பட்ட யுத்தத்தில் ஜயித்தாரே?

இ. வ:—யுத்தத்தில் ஜயித்தால் மட்டும் போதுமா? ஜயத்தை உலக க்ஷேமத்துக்காக உபயோகப் படுத்தப் புத்தி வேண்டாமா?

## காட்சி 3.

[இடம்: இந்தியாவில் ஒரு ரயில் ஸ்டேஷன்.
பாத்திரங்கள்: ஏராளமான ஜனக் கூட்டம். கூட்டத்தின் ஓரத்தில் ஓர் இந்தியரும் ஒரு அமெரிக்கப் பிரயாணியும்.]

அமெரிக்கர்:—என்னத்திற்காக இந்தச் சின்ன ஸ்டேஷனில் இவ்வளவு கூட்டம் கூடியிருக்கிறது?

இந்தியர்:—மகாத்மா காந்தி இந்த ஸ்டேஷன் வழியாக ரயிலில் போகிறாராம். அவரைத் தரிசிப்பதற்காகக் கூட்டம் கூடியிருக்கிறது.

அமெரிக்கர்:—அடே அப்பா! மகாத்மா காந்தியின் பேரில் இந்த ஜனங்களுக்கு என்ன அவ்வளவு பக்தி?

இந்தியர்:—அவர் மகாத்மா, அதனால்தான்!

# சிரஞ்சீவித் தலைவர்

தமிழ் மறையாகிற திருக்குறளில் நமக்கு எவ்வளவோ நம்பிக்கை யிருந்த போதிலும், அந்த நம்பிக்கை ஆட்டங் கொடுக்கும்படியான சம்பவம் ஒன்று சமீபத்தில் நேரிட்டது.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு"

என்று திருவள்ளுவர் சொல்லி யிருக்கிறாரே? டாக்டர் அம்பேத்கார் என்பதாக ஒரு மனிதர் பிறந்து வளர்ந்து வைஸ்ராய் நிர்வாகசபையில் அங்கத்தினராகிச் சென்னைமா நகருக்கு வந்து என்னவெல்லாமோ பேசப் போகிறார் என்று திருவள்ளுவர் எதிர் பார்த்திருந்தால் அவ்விதம் சொல்லி யிருப்பாரா? ஒரு மனுஷன் தன் ஆயுள் காலமெல்லாம் உளறக்கூடிய அவ்வளவு உளறலையும், பிதற்றக் கூடிய அவ்வளவு பிதற்றலையும், ஒன்றே நாளைக்குள் திருவாய் மலர்ந்துவிட்ட மகானுபாவரின் விஷயத்தில் திருவள்ளுவரின் வாக்குப் பொருந்துமா? பொய்யாமொழிப் புலவரின் வாக்கு, கடைசியில் பொய்த்துப் போய்விடும் போலிருக்கிறதே?

இத்தகைய பயத்துடனே, எப்படியும் வள்ளுவர் வாக்கைப் பரிபூரணமாய்ப் பரிசோதித்து விடுவது என்ற சங்கல்பத்துடனே, டாக்டர் அம்பேத்காரின் திருப் பிதற்றல்களை யெல்லாம் அலசி ஆராய்ந்து கவனத்துடன் படித்தோம்.

ஆஹா! இது என்ன? இப்பேர்ப்பட்ட மெய்ப்பொருள் இவருடைய வாய் மொழியிலிருந்தும் வெளி வந்திருக்கிறதே!

"வேறு எந்த நாட்டிலாவது இந்த காந்தியைத் தலைவராக ஒப்புக்கொண்டிருப்பார்களா? அவர் தீர்க்க திருஷ்டி அற்ற மனிதர்; அறிவு இல்லாதவர்; நல்லது கெட்டது தெரியாதவர். பொது வாழ்க்கையிலே அவர் ஆதிமுதல் அந்தம் வரையில் தோல்வியே அடைந்து வந்திருக்கிறார்!........ எனினும், இந்தத் தேசத்தில் அவர் தலைவராக இருந்து வருகிறார்!......"

இவ்விதம் சென்னையில் செப்டம்பர் 24உ மாலை நடந்த பொதுக் கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கார் கூறினார்.

உண்மை; உண்மை; முக்காலும் உண்மை!

ஆஹா! டாக்டர் அம்பேத்காருடைய வாயிலிருந்து மல்லவா அற்புதமான மெய்ப் பொருள் வெளியாகி யிருக்கிறது?

திருவள்ளுவர் மகான்தான்; பொய்யா மொழிப் புலவர்தான். சந்தேகமில்லை.

* * *

இந்தியாவுக்கும் மற்ற தேசங்களுக்கும் உள்ள வித்தியாசமும் டாக்டர் அம்பேத்காரின் கூற்றில் அடங்கிக் கிடக்கிறது.

அதே மாதிரி, காந்தி மகானுக்கும் மற்ற நாடுகளின் தலைவர்களுக்கும் உள்ள வித்தியாசமும் அதிலே ஒளிந்து கொண்டிருக்கிறது.

மற்ற நாடுகளிலே தலைவர்களை அவர்களுடைய வெற்றிகளுக்காகவே ஜனங்கள் மதிக்கிறார்கள்.

இந்திய நாட்டிலோ தலைவர்களை அவர்களுடைய தோல்விகளுக்காக ஜனங்கள் போற்றுகிறார்கள்.

மற்ற நாடுகளில் தலைவர்கள் வெற்றிக்கு மேல் வெற்றியாக அடைந்து வரும் வரையில் அவர்களை ஜனங்கள் கொண்டாடுவார்கள்; தலையிலே தூக்கி வைத்துக்கொண்டு கூத்தாடுவார்கள். இன்னும் என்ன வேணுமானாலும் செய்வார்கள்.

ஆனால், தோல்வியடைய ஆரம்பித்து விட்டார்களோ, எல்லாம் தொலைந்தது!

யுத்த ஆரம்பத்தில் தோல்வியடைந்த சேம்பர்லின், பிரதம மந்திரி பதவியிலிருந்து தள்ளப்பட்டு மனமுடைந்து இறந்து போனார்.

இதாலியில் எத்தனையோ வருஷ காலம் சர்வாதிகாரியாய் விளங்கிய முஸோலினி இன்று ஜெர்மனியில் அடைக்கலம் புகுந்திருக்கிறார்.

ருமேனியாவின் சர்வாதிகாரி அண்டனஸ்கோ இன்று சிறையில் அடைக்கப் பட்டிருக்கிறார்.

ஜப்பானில் டோஜோ இருக்கும் இடமே தெரியவில்லை.

ஜெர்மன் தளபதிகளில் வீராதி வீரர்கள் என்று கொண்டாடப்பட்ட

-உம்மன்




அக்டோபர் இரண்டாந்தேதி மகாத்மாவிடம் சமர்ப்பிக்கப்படப் போகும் கஸ்தூரிபாவின்நிதி எதிர்பார்த்த 75 லட்சத்துக்குமேல் சேர்ந்து விட்டது.

ஹரிஜனங்கள் தங்கள் பலத்தை விருத்தி செய்து கொள்ள வேண்டுமென்று டாக்டர் அம்பேத்கார் உபதேசிக்கிறார்.

மாகப் போன யமன் காதில் அது விழ, அவன் உடனே எதிரே வந்து நின்று, "வாரும்! போகலாம்!" என்றானாம். அப்போது அந்த மனிதன் மிரண்டு போய், "ஓகோ! நீ எந்த யமன்? நான் அழைத்த யமன் நீதானா? அதற்கென்ன ஆக? யமன் என்று சொல்லி என்னை ஏமாற்றவா பார்க்கிறாய்? போ! போ! வர முடியாது!" என்றானாம்.

ஜனாப் ஜின்னா 'பாகிஸ்தான்' கோரிய கதையும் கிட்டத்தட்ட இப்படித்தான் ஆகியிருக்கிறது. பாகிஸ்தான் கிட்ட நெருங்கியதும் 'வேண்டாம்' என்று ஜனாப் ஜின்னா வெருண்டு பின் வாங்குகிறார் என்பதை, காந்திஜி — ஜின்னாஜி கடிதப் போக்கு வரவிலிருந்து ஸ்பஷ்டமாக அறியலாம்.

## எதற்குக் கையெழுத்து?

முஸ்லிம்களுக்குப் 'பாகிஸ்தான்' அல்லது தனி ராஜ்யம் கொடுப்பதற்கு மகாத்மா காந்தி மனப்பூர்வமாய் ஒப்புக்கொள்கிறார் என்பது மகாத்மாவின் கடிதங்களிலிருந்து மிகத் தெளிவாக வெளியாகிறது. ஆனால் ஜனாப் ஜின்னா என்ன சொல்கிறார்? முக்கிய விஷயத்துக்கு வராமல், கொஞ்சங் கூடப் பிடி கொடுத்துப் பேசாமல், மேலெல்லாம் விளக்கெண்ணெய் தடவிக்கொண்டு குஸ்தி போடும் மல்லனைப் போல், வளைந்தும் நெளிந்தும் கொடுத்துக்கொண்டே இருக்கிறார். மகாத்மா காந்தி யாருடைய பிரதிநிதி, அவருடைய அந்தஸ்து என்ன, அதிகார ஹோதா என்ன என்றெல்லாம் வளைந்து வளைத்துக் கேட்கிறார்.

இது போதாதென்று, "ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒரு தேசத்து ஒரு ஜாதி அல்ல; இரண்டு தேசத்து இரண்டு ஜாதி" என்பதாக எல்லாவற்றிற்கும் முதலில் மகாத்மாவை ஒப்புக்கொள்ளச் சொல்கிறார். ஜனாப் ஜின்னா உண்மையில் 'பாகிஸ்தான்' விரும்பும் பட்சத்தில், இந்த இரு ஜாதிப் பிரச்னையை அடிப்படையான பிரச்னையாக நினைப்பாரா? இவருக்கு உண்மையில் வேண்டியது தனி ராஜ்யமாயிருக்கும் பட்சத்தில், ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒரு ஜாதியாயிருந்தாலென்ன? இரு ஜாதியாயிருந்தாலென்ன? அது என்ன அவ்வளவு முக்கிய விஷயம்?

ஜனாப் ஜின்னாவின் கோரிக்கை எப்படி இருக்கிறதென்றால், அண்ணனுக்கும் தம்பிக்கும் ஒத்துக் கொள்ளாமல், தம்பி பாகம் கேட்டு அண்ணன் அதை ஒப்புக்கொண்ட பிறகு தம்பி, "பாகப் பிரிவினை அப்புறம் இருக்கட்டும். முதலில், நீ என் அண்ணன் இல்லையென்றும், நான் உன் தம்பி இல்லையென்றும் எழுதிக் கையெழுத்துப் போட்டு ஸப் ரிஜிஸ்ட்ரார் ஆபீஸில் ரிஜிஸ்டர் செய்து கொடு!" என்று கேட்பது போலத்தான் இருக்கிறது.

## ஏமாற்றமில்லை

காந்தி-ஜின்னா பேச்சு முறிந்ததில் உண்மையாகவே நமக்கு அணுவளவும் ஏமாற்றமில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். ராஜாஜி திட்டத்தைப் பற்றி ஜனாப் ஜின்னா லாகூரில் எப்போது அந்த தோரணையில் பேசினாரோ, அப்போதே அவருக்கு ஒரு சமரச முடிவுக்கு வரும் விருப்பம் இல்லவே இல்லை என்பது நமக்கு ஸ்பஷ்டமாகி விட்டது.

ஏமாற்றமில்லையே தவிர, வருத்தம் இருக்கத்தான் இருக்கிறது. இந்த காந்தி-ஜின்னா சந்திப்பும் நீடித்த சம்பாஷணையும் வேறு விதமாக முடிந்திருந்தால், ஒரு சமரச முடிவு ஏற்பட்டிருந்தால், தேசமெல்லாம் இப்போது ஒரே குதூகலமும் கொண்டாட்டமாகவுந்தான் இருந்திருக்கும். அடுத்தபடி தேசம் சுதந்திரமடையும் முயற்சியில் கவனம் செலுத்த முடிந்திருக்கும். இப்படி நடக்காமல் போனதில் நமக்கு வருத்தம் இல்லாமற் போகவில்லை.

## நம்பிக்கை உண்டு

வருத்தப்படுகிறோம் என்பதினால் ஒரேயடியாகத் துயரக் கடலில் நாம் ஆழ்ந்து விடவுமில்லை. இரண்டு வருஷத்துக்கு முன்னால் செய்திருக்க வேண்டிய பிரயத்தனத்தைக் காலந் தாழ்த்திச் செய்யும்போது இது போன்ற இடையூறுகளையும் தோல்விகளையும் எதிர்பார்க்கத்தான் வேண்டும்.

ஆனால், முயற்சி தோல்வியடைந்த போதிலும் அதனால் பலன் இல்லை என்று நாம் சொல்லத் தயாராயில்லை. அதனால் எவ்வளவோ பலன் இருக்கத்தான் இருக்கிறது. உண்மையில், இந்தத் தோல்வியிலேயே வெற்றியின் விதை இருக்கிறதென்றும், இந்தத் தோல்வியே அடுத்தபடி கிடைக்கப் போகும் வெற்றியின் முதல் படியென்றும் நாம் கருதுகிறோம். "இதோடு எல்லாம் முடிந்து விடவில்லை. இன்னமும் சமரச முயற்சி செய்யத்தான் போகிறோம்" என்று இரு தலைவர்களும் பொது ஜனங்களுக்கு அறிவித்திருப்பது நமது நம்பிக்கையைப் பெரிதும் ஊர்ஜிதப்படுத்துகிறது.


பத்திரிகைகளில் வெளியாகியிருக்கும் காந்தி-ஜின்னா கடிதங்களிலிருந்து காந்திஜி சமரசத்துக்காக எவ்வளவோ விட்டுக்கொடுக்க முன்வந்தும் ஜனாப் ஜின்னா ஒரே பிடிவாதமாக ராஜிக்கு இணங்கவில்லை என்று தெரிகிறது.


கடைசிச் செய்தி
காந்தி-ஜின்னா பேச்சு முறிவு


காந்தி-ஜின்னா பேச்சு முறிந்த செய்தி தேச மக்களுக்கு வருத்தத்தையும் அன்னியர்களுக்கு ஆனந்தத்தையும் அளித்திருக்கிறது.




# கல்கி

மலர் 4 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 9


# என்ன சேதி?

## மற்றொரு காரணம்

சென்ற இதழில் 'பக்ரீத் பண்டிகை' என்று நாம் குறிப்பிட்டது உண்மையில் 'பக்ரீத்' பண்டிகை அல்லவென்றும், அது ரம்ஸான் ஈத் பண்டிகை என்றும் சில முஸ்லிம் நேயர்கள் நமக்கு எழுதித் தெரிவித்திருக்கிறார்கள். தினசரிப் பத்திரிகைகளில் 'ஈத் கொண்டாட்டம்' என்றும், 'ஈத் தினச் செய்தி' என்றும் வெளியாகியிருந்த படியால், ஒரு வேளை 'ஈத்' பண்டிகையைத்தான் மரியாதையாக 'பக்ரீத்' என்று குறிப்பிடுவது வழக்கமாகும் என்று நாம் எண்ணிவிட்டோம். இவ்விதம் நாம் செய்த பிழையானது முஸ்லிம் நேயர்களில் சிலருக்கு வருத்தம் அளித்தது பற்றியும் நாம் வியப்படையவில்லை. நம்முடைய தீபாவளிப் பண்டிகையை முஸ்லிம்கள் 'தீபாவளி விரதம்' என்றோ, நம்முடைய வருஷப் பிறப்புப் பண்டிகையை 'வருஷாப்திகம்' என்றோ கூறினால், அவை பொருளில் பொருந்தமாயிருந்தாலும், நமக்கு வருத்தமுண்டாவது இயல்பேயல்லவா?

எனவே, ஈத் பண்டிகைக்கு மரியாதை அளிப்பதாக எண்ணிக்கொண்டு 'பக்ரீத்' என்று குறிப்பிட்டதற்காக வருந்தப்படுகிறோம். அதோடு, முஸ்லிம்கள் 'பாகிஸ்தான்' கோருவதற்கு இதுவும் ஒரு காரணமாவதையும் உணர்கிறோம். முஸ்லிம்களின் பண்டிகைகளைக் கூட நாம் சரியாக அறிந்து கொள்ள முடியாமலிருக்கும் போது, அவர்கள் தனி ராஜ்யம் கேட்பதில் என்ன அநியாயம் இருக்கிறது? ஒன்றுமே இல்லை.

ஆகையினால்தான் மகாத்மா காந்தி 'பாகிஸ்தான்' கொடுப்பதாக எவ்வளவோ வருந்தி வருந்திச் சொல்லியும் ஜனாப் ஜின்னா ஏன் அதை மறுதளித்துப் பின் வாங்கினார் என்பது நமக்கு ஒரே திகைப்பையும் வியப்பையும் அளித்துத் திக்கு முக்காடச் செய்கிறது.

## நமது அநுதாபம்

“சரி; இனிமேல் எல்லாரும் என் மேல் பாய்ந்து என்னைத் தாக்கவும் திட்டவும் ஆரம்பித்து விடுவார்கள்” என்று ஜனாப் ஜின்னா தமது கடைசிக் கடிதத்தின் கடைசி வாக்கியத்தை முடிக்கிறார். பாய்தல், திட்டல், தாக்கல் முதலிய காரியங்களில் ஜனாப் ஜின்னாவுக்கு மிஞ்சியவர்கள் யாருமில்லை யென்பதும், அவரிடம் மற்றவர்கள் எல்லாம் பாடம் கற்றுக் கொள்ள வேண்டுமென்பதும் பிரசித்தியான விஷயம். நம்மைப் பொறுத்த வரையில், ஜனாப் ஜின்னாவைத் தாக்கவும் திட்டவும் எவ்வித அவசியமும் இருப்பதாகத் தெரியவில்லை. உண்மையில், அவரிடம் நம்முடைய மனப்பூர்வமான அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்வதற்குத்தான் எல்லாக் காரணங்களும் இருக்கின்றன. வெண்ணெய் திரண்டுவரும் சமயத்தில் சட்டியை உடைத்த கதையாக, இத்தனை நாளும் 'பாகிஸ்தான்' 'பாகிஸ்தான்' என்று பகற்கனவும் இராக் கனவும் கண்டு அதற்காகவே பிராணனை விட்டு வந்தவர் 'பாகிஸ்தான்' கிட்ட நெருங்கி வந்ததும், “ஐயையோ! வேண்டாம்!” என்று அலறி ஓடுவாரானால், அவரிடம் அநுதாபப் படாமல் வேறென்ன செய்வது!

## “நீ எந்த எமன்?”

உலக வாழ்க்கையில் அலுத்துப் போன ஒருவன் “ஐயோ! யமனே! நீ வந்து என்னைக் கொண்டு போக மாட்டாயா?” என்றானாம். அந்தப் பக்க

தீபாவளிக்கு

நவீன வேலைப்பாடுகள் நிறைந்த,
பல ரக நூதன பட்டுப் புடவைகள்
ஏராளமாக வந்து குவிந்துள்ளன.

## ராதா ஸில்க் எம்போரியம்

மயிலாப்பூர் (போன் : 8016) சென்னை

பிரான்ச் :
பெரிய தெரு,
கும்பகோணம்



Coffee

Ours for Quality

RAW, ROAST OR GROUND

GANESH & Co

MADRAS

RETAIL BRANCH : 285, CHINA BAZAR ROAD



1 9 4 4

## கல்கி தீபாவளி மலர்



இவ்வருஷ கல்கி தீபாவளி மலர் தவறாமல் கிடைக்க உடனே எங்களிடம் தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ளக் கோருகிறோம். குறிப்பிட்ட விலையைவிட அதிகம் கொடுத்து பிரதிகளை வாங்காதீர்கள்.



## புஷ்பவனம் ஸ்டோர்ஸ்

கல்கி ஏஜெண்டுகள்

பைக்ராப்ட்ஸ் ரோடு

திருவல்லிக்கேணி — மதராஸ்



பேபி பிராண்டு நெய்

சுவைக்கும்
சுகத்திற்கும்
போஜனத்திற்கும்
உத்தமமானது.

ராஜம் & கோ., கோயமுத்தூர்



# கல்கி பொருளடக்கம்



மலர் 4 இதழ் 9 | 1944 அக்டோபர் 1 | தாரண ஐ புரட்டாசி 16



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

அக்டோபர் மாதம் 2உ இந்தியாவுக்கு ஒரு புண்ணிய தினம்; புனித தினம்: பாரத நாட்டின் பாக்கிய தினம். பாரத தேசத்தை வாழ்விக்க வந்த காந்தி மகாத்மா பிறந்த தினம். வருங்கால இந்திய சந்ததிகள் நீடூழி கொண்டாடப் போகும் பண்டிகை தினம்.

நாளை, மகாத்மாவின் 75-வது பிறந்த தினத்தில் அன்னை கஸ்தூரிபாயின் ஞாபகார்த்தமான தர்ம கைங்கரியங்களை நடத்துவதற்காக, தேசம் அவரிடம் 75 லட்சம் ரூபாய் சமர்ப்பிக்க வேண்டுமென்று நாட்டின் பெரியோர்கள் தீர்மானித்தார்கள். தேசம் அத்தீர்மானத்தை நிறைவேற்றி வைத்து விட்டது. 75 லட்சத்துக்கு மேலேயே நிதி வசூலாகி விட்டது.



தேசமெங்கும் நாளை மகாத்மா பிறந்த தினத்தைக் குதூகலமாகக் கொண்டாடுகிறார்கள். வார்தாவில் தேசப் பெரியோர்கள் கூடிக் கஸ்தூரிபா நிதியை மகாத்மாவிடம் சமர்ப்பிக்கிறார்கள்.

தேச மக்களின் அன்பு கனிந்த வாழ்த்துக்களையும் அவர்கள் அளிக்கும் தர்ம கைங்கரிய நிதியையும் மகாத்மா மனமுவந்து ஏற்றுக் கொள்கிறார்.

ஏற்றுக்கொண்டு தேசத்துக்கு ஆசி கூறுகிறார்: தேச மக்களுக்கு ஆறுதல் கூறுகிறார்: அபயப் பிரதானமும் அளிக்கிறார்.

இத்தகைய அபய கரத்துடன் விளங்கும் மகாத்மாவின் அற்புதத் தோற்றம் சமீபத்தில் பம்பாயில் நடந்த பிரார்த்தனைக் கூட்டமொன்றில் எடுக்கப்பட்டது. அதை அளவில்லாத மகிழ்ச்சியுடனும் குதூகலத்துடனும் நமது மகத்தான பாக்கியமாகக் கருதி அட்டையில் வெளியிட்டிருக்கிறோம்.

போட்டோ: எல்லிஸ் ஆர். டங்கன்

# தீபாவளி ரிலீஸ்



## தியாகராஜ பாகவதர்

ராஜகுமாரி · வஸந்தகோகிலம்

கிருஷ்ணன்....., மதுரம் நடிக்கும்

ராயல் டாக்கீஸ்

# ஹரிதாஸ்

டைரக்டர் சுந்தர் ராவ் நட்கர்னி

ஸ்டுடியோ: சென்டிரல் ஸ்டூடியோஸ்
....கோயமுத்தூர்.....

ராயல் டாக்கி
டிஸ்டிரிபியூட்டர்ஸ்
-பெஜவாடா



W.K. மேனன்

ROYAL TALKIE

P.S.M.Co.

# ஜனங்கள்

## வாங்க விரும்புவது

# பாவ்ரி சீட்டுக்கட்டுகள்

ஜனங்கள் அவைகளை விரும்புவதோடல்லாமல் — அவை அவர்களுக்குத் தேவையாயும் இருக்கின்றன. அவர்கள் அதை வாங்கத்தான் செய்வார்கள். பொது மக்களுக்கு அவற்றை நீங்கள் அளிக்காவிடில் நிச்சயமாக வேறு யாராவது கொடுப்பர். ஆகையால் நீங்கள் பாவ்ரி சீட்டுக்கட்டுகளை வாங்கி வைக்கத் தவறாதீர்கள்.

சர்க்கார் கட்டுப்பாடு விலைகள்

| | | | | |
|---|---|---|---|---|
| சீகல் | 1551 | பிராண்டு | பாக்கெட் ஒன்றுக்கு | ரூ. 2-0-0 |
| சொஸைட்டி | 1441 | ,, | ,, | ரூ. 1-10-0 |
| விண்ட்ஸர் | 1661 | ,, | ,, | ரூ. 1-8-0 |
| பீகாக் | 815 | ,, | ,, | ரூ. 1-0-0 |

மற்றும் அனேக ரகங்கள்



தென்னிந்தியாவுக்கு சோல் ஏஜெண்டுகள்:

## விஜயா கார்ப்பொரேஷன்

லக்ஷ்மி பில்டிங், சர் பிரோஸ்ஷா மேதா ரோடு, பம்பாய்



லோகல் ஏஜெண்டுகள்:

**விஜயா கார்ப்பொரேஷன்**

117, அரமனைக்காரன் தெரு,

ஜி. டி., மதறாஸ்.

கோவைக்கு ஏஜெண்டுகள்:

**நேஷனல் கெமிகல் அண்டு இண்டஸ்ட்ரீஸ்**

கோச்சின் ஹவுஸ், காக்ஸ் தெரு, கோவை.

கொச்சினுக்கு ஏஜெண்டுகள்:

**ஓரியண்டல் ஸ்டோர்ஸ்**

மட்டாஞ்சேரி :: கொச்சின்

பெங்களூருக்கு ஏஜெண்டுகள்:

**ஓவர்ஸீஸ் டிரேடிங் கார்ப்பொரேஷன்**

83, கலாஸ் பாளையம், பெங்களூர் ஸிடி.



புதிய **கொலம்பியா** வெளியீடு

கானஸரஸ்வதி

# D.K. பட்டம்மாளின்

## இன்னிசை கானங்கள்

GE. 6161

**நினைப்பதெப்போது**
நாதநாமக்ரியா

**இந்தபாராமுகம்**
பூர்வகல்யாணி

**ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.**

G.H. RAO

---

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்:

முகமது இப்ராஹிம் & கம்பெனி, சென்னை. S. கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி,
V. S. ராஜகோபாலன் கம்பெனி, சென்னை, பங்களூர், சேலம், கோயமுத்தூர்.
M. A. ஹிருதயசாமி & கம்பெனி, உதகமண்டலம்.




## அத்தியாயம் 20

# வந்தான் குண்டோதரன்!

**படை**களின் முழக்கத்தைக் கேட்டதும், சற்றுப் பின்னால் வந்து கொண்டிருந்த ஆயனரும் புத்த பிக்ஷுவும் வண்டியை நெருங்கி வந்தார்கள்.

முன்னணிப் படை கண்ணுக்குத் தெரிந்ததும், வண்டி சாலையில் ஒதுப்புறமாக நின்றது. சிவகாமியும் அத்தையும் வண்டியிலிருந்து இறங்கி நின்று கொண்டார்கள். படை வரும் முழக்கம் அத்தையின் காதில் விழாதபடியால், மற்றவர்களைவிட அவளுக்கு வியப்பு அதிகமாயிருந்தது.

புத்த பிக்ஷு சாலை ஓரத்து மரத்தின் பின்னால் தெரிந்தும் தெரியாமலும் நின்று கொண்டார். அவர் இராஜ வம்சத்தினரைக் கண்ணாலும் பார்ப்பதில்லை என்பது போன்ற விரதங்கள் கொண்டவர் என்பது தெரியுமாதலால் அவர் மறைந்து நிற்பது பற்றி மற்றவர்களுக்கு வியப்பு ஏற்படவில்லை.

ஆனால், எல்லாருக்கும் மனம் ஒருவாறு கலக்கமடைந்துதானிருந்தது. வருகிறது என்ன படை? எங்கே போகிறது? எதற்காக?

தெற்கே இருந்து வருகிறபடியால் அது வாதாபிப் படையாயிருக்க முடியாது. பின்னே, யாருடைய படை?

* * *

**கா**ஞ்சியிலிருந்து கிளம்பி வருகிற வழியில் நமது பிரயாணிகள் பெரும்பாலும் யுத்தப் போக்கைப் பற்றியும், யுத்த முடிவு என்ன ஆகும் என்பதைப் பற்றியும் பேசிக்கொண்டு வந்தார்கள். இதற்கு அவசியமும் ஏற்பட்டது.

வழியெல்லாம் ஏக ஜனநடமாட்டமாயிருந்தது. எல்லாரும் தெற்கு நோக்கிப் போகிறவர்களாகவேயிருந்தார்கள். அநேகமாக அவர்கள் அனைவரும் காஞ்சி நகரிலிருந்தும் காஞ்சிக்குச் சுற்றிலுமுள்ள கிராமங்களிலிருந்தும் யுத்த நிலைமையை முன்னிட்டுப் புறப்பட்டவர்கள்.

அப்படிப் புறப்பட்டு வந்தவர்களிலே ஸ்திரீகள், குழந்தைகள், வயோதிகர்கள், ஆண்டிப் பரதேசிகள், கூனர்கள், குருடர்கள், காபாலிகர்கள் முதலியோர் அதிகமாகக் காணப்பட்டார்கள்.

முக்கியமாகக் காபாலிகர்கள் வழியெல்லாம் பல்லவ ராஜ குலத்தைச் சபித்துக் கொண்டு போனார்கள். காஞ்சி நகரில் கள்ளுக் கடைகளை மூடித் தங்களை நகரைவிட்டுத் துரத்திய குமார சக்கரவர்த்தியின் பேரில் அவர்கள் தங்களுடைய சாபங்களுக்குள்ளே மிகக் கடுமையான சாபங்களைப் பொழிந்து கொண்டு போனார்கள். நராதமர்களுக்குள்ளே அதமனான மாமல்ல நரசிம்மன் என்னும் சண்டாளனை ரணபத்திர காளிக்குப் பலிகொடுத்து, தாங்கள் மதுபானம் செய்யும் மாட்டுக் கொம்பிலே அவனுடைய இரத்தத்தை ஏந்திக் குடித்துத் தங்களுடைய பயங்கரமான மரண தாகத்தைத் தணித்துக் கொள்ளப் போவதாக அவர்களில் பலர் உரத்த சத்தம் போட்டுச் சபதம் செய்து கொண்டு போனார்கள். இன்னும் சிலர், மாமல்ல நரசிம்மனையும் தளபதி பரஞ்சோதியையும் சேர்த்

துக்கட்டி, மயான ருத்திரனுக்குப் பிரீதியாக உயிரோடு கொளுத்தி, அவர்களுடைய எலும்புச் சாம்பலைத் தங்கள் உடம்பெல்லாம் பூசிக் கொண்டு உஷ்ணம் தணியப் போவதாகச் சபதம் செய்தார்கள். இந்தச் சாபங்கள் சபதங்கள் எல்லாம் பிராகிருத பாஷையிலும் வேறு கலப்பு மொழிகளிலும் செய்யப்பட்டதானது, அந்தக் காபாலிகர்கள் வடதேசத்திலிருந்தும் மேற்கிலுள்ள* கங்கநாட்டிலிருந்தும் வந்தவர்கள் என்பதைத் தெரியப்படுத்தியது.

சிவகாமி ஆங்காங்கு வண்டியில் பிரயாணம் செய்தபடியாலும், அவளுடைய உள்ளம் வேறு வேறு உலகங்களில் சஞ்சரித்துக் கொண்டிருந்தபடியாலும் அவளுடைய காதில் அந்தப் பயங்கர சாபங்கள் ஒன்றும் விழவில்லை. ஆனால் ஆயனருடைய காதில் அவை எல்லாம் கர்ண கடூரமாக விழுந்தன. அவற்றைக் கேட்கச் சகிக்காமல் அவர் காதைப் பொத்திக் கொண்டார்.

புத்த பிக்ஷுவின் செவிகளுக்கு மட்டும் அந்தச் சாபங்கள் எவ்வித அருவருப்பையும் அளித்ததாகத் தெரியவில்லை. அதற்கு மாறாக, அவருடைய முகத்தின் கடூரத்தை இன்னும் கடூரமாக்கிக் கொண்டு சில சமயம் புன்னகையே தோன்றியது.

பிக்ஷு ஒரு தடவை காபாலிகர் கூட்டத்தில் புகுந்து பேசிக் கொண்டிருந்து விட்டு, வெளி வந்து ஆயனரை அணுகியதும், "ஆயனரே! எப்போதாவது நான் புத்த சமயத்தைத் துறந்து சைவனாகும் பட்சத்தில், காபாலிக சைவத்திலேயே சேர்வேன்!" என்றார்.

இதுதான் ஆயனரைத் தூக்கி வாரிப் போட்டது. "சுவாமி! அத்தகைய எண்ணம் தங்களுக்கு ஏன் வர வேண்டும்? அஹிம்சா மூர்த்தியான புத்த பகவான் மீது தங்களுக்கு என்ன கோபம்? யுத்தங்களினால் ஏற்படும் சங்கடங்களைப் பார்க்கப் பார்க்க, புத்த பகவான் காட்டிய மார்க்கமே மகா உத்தமமான மார்க்கம் என்றல்லவா எனக்கே தோன்றி வருகிறது?" என்றார்.

"அதனாலேதான் நானும் சொல்கிறேன். நீங்கள் காலசம்ஹார மூர்த்தியைக் கைவிட்டுப் போதிஸத்துவரை அடைவதாயிருந்தால், அதற்குப் பிரதியாகக் கபால ருத்திர மூர்த்திக்கும் ஒரு அடியார் வேண்டுமல்லவா?" என்று நாகநந்தி கூறியது ஆயனருக்கு மேலும் மனக் குழப்பத்தை உண்டாக்கிற்று.

சாலையில் அபூர்வமாய்த் தெற்கேயிருந்து வரும் பிரயாணிகள் சிலர் காணப்படும்போது அவர்களைக் காஞ்சிப் பக்கமிருந்து வருகிறவர்கள் நிறுத்தி, "தெற்கே என்ன விசேஷம்?" என்று கேட்பார்கள். அவர்கள் மறுமொழி சொல்லிவிட்டுக் காஞ்சி நிலைமையைப் பற்றி விசாரிப்



* தற்போதைய மைசூர்ப் பிரதேசம் அந்நாளில் கங்கநாடு என்று வழங்கிற்று.

பார்கள். இந்தப் பேச்சுக்களையெல்லாம் நாகநந்தி ஆங்காங்கு நின்று வெகு சுவாரஸ்யமாகக் கவனிப்பார்.

இப்படி ஒரு தடவை கூட்டத்தில் நின்று பேச்சுக் கேட்ட பிறகு, நாகநந்தி, ஆயனர் சிவகாமி இருவர் காதிலும் விழும்படியாக, "நாம் ஒன்று நினைக்க யுத்த தேவன் வேறொன்று நினைக்கிறான் போலல்லவா தோன்றுகிறது? உத்தேசித்தபடி நமது பிரயாணம் நடைபெறாது போலிருக்கிறதே?" என்றார்.

"ஆகா! புத்த தேவர் என்ன கருணை செய்கிறார்? அவருடைய எண்ணம் என்ன?" என்றார் ஆயனர்.

"அத்தையைப்போல் அப்பாவுக்கும் காது மந்தமாகி வருகிறது!" எனறு கூறிச் சிவகாமி புன்னகை புரிந்தாள்.

அந்த நகைச் சுவையை அநுபவித்த நாகநந்தி, செவிடருடன் பேசுவது போன்ற உரத்த குரலில், "ஆயனரே, நான் புத்த தேவரைச் சொல்லவில்லை; யுத்த தேவனைச் சொல்கிறேன்" என்றார்.

"அது என்ன? யுத்த தேவன் என்ன சொல்கிறார்? நம்மை வழி மறிக்கப் போகிறாரா?" என்று ஆயனர் கேட்டார்.

"அப்படித்தான்!" என்று நாகநந்தி மறுபடி மெல்லிய குரலில் கூறினார்:—"பல்லவ ராஜ்யத்துக்கு எதிர்பாராத ஆபத்துக்கள் எல்லாம் வந்து கொண்டிருக்கின்றன. மேற்கே இருந்து கங்க நாட்டுச் சைன்யம் படை எடுத்து வந்து எல்லைப் புறத்தில் நிற்கிறதாம். தெற்கே பாண்டிய மன்னர் பெரும் படை திரட்டிக்



கொண்டு வருகிறாராம். பாண்டிய சைன்யம் கிழக்குச் சோழ நாட்டு எல்லைக்கு வந்துவிட்டதாம். பல்லவ சக்கரவர்த்தியும் பல்லவ சைன்யமும் தப்புவதற்கு இன்னும் ஒரு திசை தான் பாக்கியிருக்கிறது......"

"எந்தத் திசையைச் சொல்கிறீர்கள்?" என்று ஆயனர் கேட்டார்.

"கிழக்குத் திசையைத்தான் சொல்கிறேன்; கிழக்கே சமுத்திர ராஜனிடம் வேணுமானால் மகேந்திர பல்லவர் அடைக்கலம் புகலாம்."

"சமுத்திரத்திலே விழுந்து சாகலாம் என்கிறீர்களா? அடிகளே! உங்களுடைய இருதயம் இப்படி ஈரப் பசையேயில்லாத பாலைவனமாக எப்போது ஆயிற்று?" என்று ஆயனர் சற்றுக் கோபக் குரலில் கூறினார்.

"ஓ மகா ஸ்தபதியே? என்னை அவ்வளவு நீசகுணமுள்ளவன் என்று ஏன் தாங்கள் கருத வேண்டும்? பல்லவ வம்சம் கடல் தந்த குழந்தையிலிருந்து தோன்றியதாயிற்றே? இப்போது அந்த வம்சத்துக்கு ஆபத்து வந்திருக்கும் சமயத்தில் அந்தக் கடல் அடைக்கலம் தராதா என்று சொன்னேன். கடலில் அடைக்கலம் என்றால், கடலில் மூழ்கிவிடுவது என்றுதான் பொருளா? கப்பல் ஏறி இலங்கைக்குப் போய்த் தப்பலாமல்லவா?......ஆனால் அதற்கும் ஒரு ஆபத்து இருக்கிறது. இலங்கையில் இப்போதுள்ள அரசன் மகேந்திர பல்லவரின் அருமைச் சிநேகிதன் தான். அவனை இலங்கைச் சிம்மாசனத்திலிருந்து தள்ளிவிட ஒரு பெருங் கலகம் அங்கே நடக்கிறதாம். பாவம்! பல்லவர்களுக்கு வந்திருக்கும் கஷ்ட காலம் அவர்களுடைய சிநேகிதர்களையும் பிடிக்கிறது" என்று கூறிவிட்டுப் புத்தபிக்ஷு ஒரு கோரச் சிரிப்புச் சிரித்தார்.

ஆயனர் அப்போதும் விட்டுக் கொடுக்காமல், "எதற்காக மகேந்திர பல்லவர் இலங்கைக்கு ஓட வேண்டும்? காஞ்சிக் கோட்டை இருக்கிறதல்லவா?" என்றார்.

"ஆமாம்; காஞ்சிக் கோட்டை இருக்கிறது. அதில் எட்டு மாதத்துக்கு முன்பே பயங்கொள்ளிப் பல்லவன் ஒளிந்து கொண்டதுபோல் இப்போது அவனுடைய அப்பனும் ஒளிந்து கொள்ளலாம். ஆறு மாதத்துக்கு முன்பு வாதாபிப் படை வந்திருந்தால் கோட்டை ஒரு நொடியில் தகர்ந்து போயிருக்கும். இப்போது கோட்டை பலப்பட்டு விட்டது. ஒளிந்து கொள்ள நல்ல இடந்தான். வாதாபிப் படை ஆறு மாதமாக வடபெண்ணைக் கரையில் என்ன செய்து கொண்டிருந்தது என்றுதான் தெரியவில்லை!" என்றார் புத்தபிக்ஷு.

இந்த வார்த்தைகள் எல்லாம் சிவகாமியின் செவிகளில் புண்ணில் கோல் இடுவதுபோல் விழுந்தன.

"பகவானே! நாக்கிலே விஷமுள்ள இந்த நாகநந்தியின் கர்வத்தை அடக்க மாட்டாயா?" என்று வேண்டிக் கொண்டாள்.

திடீரென்று மாமல்ல நரசிம்மர் ஒரு மகா வீரர் ஆகிவிடக் கூடாதா? பல்லவ ராஜ்யத்தின் எதிரிகள் எல்லாரும் படுநாசமாகி விடக் கூடாதா என்றெல்லாம் எண்ணி அவளது உள்ளம் கொதித்தது.

புத்த பிக்ஷுவின் விஷயத்தில் சிவகாமியின் மனோநிலை சஞ்சலமுள்ளதாயிருந்தது. அவரிடம் காரணமில்லாத அருவருப்பும், இன்னதென்று தெரியாத ஒருவகைப் பயமும் அவள் மனத்தின் ஆழத்தில் குடி கொண்டிருந்தன. மாமல்லரைப் பற்றி அவர் கூறிய செய்திகளுக்காக அவரை நெஞ்சார அவள் துவேஷித்தாள்.

இன்னொரு பக்கம், புத்த பிக்ஷுவின் விஸ்தாரமான உலக அநுபவமும், ஆழ்ந்த கலைஞானமும் அவரிடம் அவளுக்குப் பக்தியையும் மரியாதையையும் உண்டு பண்ணியிருந்தன. மேலும், தூர தூர தேசங்களுக்கெல்லாம் சென்று அங்கங்கே மகா சபைகளில் நாட்டியமாடி, "பரத கண்டத்தின் ஒப்பற்ற நடன ராணி" என்று பெயரும் புகழும் பெறுவது பற்றிப் பிக்ஷு அடிக்கடி கூறி அவளுடைய உள்ளத்தில் திக் விஜயப் பகற்கனவுகளை

உண்டு பண்ணியிருந்தார். அதெல்லாம் அவருடைய உதவியினாலேதான் சாத்தியமாகக் கூடும் என்பதும், உலகமறியாத சாதுவான தன் தந்தையினால் ஆகாது என்பதும் அவளுக்குத் தெரிந்திருந்தன. இந்த எண்ணங்கள் எல்லாம் சேர்ந்து புத்த பிக்ஷுவிடம் தன் மனதில் குடிகொண்டிருந்த அருவருப்பைப் போக்கிக் கொண்டு அவரிடம் சிநேகபாவத்தை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்று அவள் முடிவு செய்திருந்தாள்.

ஆனாலும், புத்த பிக்ஷு பல்லவ குலத்தைப் பற்றியும் மாமல்லரைப் பற்றியும் அடிக்கடி கூறிய வசை மொழிகள் அவளுடைய முயற்சிக்குக் குறுக்கே நின்று அருவருப்பையே அதிகமாக்கி வந்தன.

**வா**தாபிப் படை வட பெண்ணைக் கரையில் ஆறு மாதமாக இருந்தது பற்றிப் புத்த பிக்ஷு குறிப்பிட்டதும், சிவகாமி ஆத்திரமான குரலில், "சுவாமி! வட பெண்ணைக்குப் போய் வாதாபிப் படைகளை நீங்களே கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வந்து விடுவீர்கள் போலிருக்கிறதே! பல்லவ குலத்தின்மேல் உங்களுக்கு என்ன அவ்வளவு கோபம்?" என்று கேட்டாள்.

"பல்லவ குலத்தின் மேல் எனக்கு என்னத்திற்கு, அம்மா, கோபம்? அவர்களுடைய கையினாலாகாத்தனத்தினால், கோழைத்தனத்தினால், இப்போது நாம் நினைத்து வந்தபடி பிரயாணம் செய்ய முடியாமலிருக்கிறதே என்றுதான் வருத்தமாயிருக்கிறது. சிதம்பரத்துக்குப் போய் அங்கிருந்து சோழ நாட்டிலுள்ள ஸ்தலங்களைத் தரிசனம் செய்து கொண்டு நாகப்பட்டினத்தில் நடக்கப் போகும் மகா புத்த சங்கத்துக்கு உங்களை அழைத்துப் போவதாகச் சொன்னேன். இப்போது பாண்டிய சைன்யம் சோழ நாட்டில் படையெடுத்து வருவதாகத் தெரிகிறது. இப்படிப்பட்ட சமயத்தில் நாம் சோழ நாட்டுக்கு எப்படிப் போவது? போனால்தான் என்ன பிரயோஜனம்?"

"பின்னே, நாம் என்னதான் செய்யலாம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?" என்று ஆயனர் கேட்டார்.

"எனக்கு ஒரு வழிதான் தோன்றுகிறது. கெடில நதிக்கரையில் ஒரு அமைதியான இடம் இருக்கிறது. தங்களுடைய சிற்ப வேலைகளை நடத்துவதற்கும் அங்கே நிறைய வசதி உண்டு. உங்களுடைய காட்டு வீட்டைவிட இன்னும் ஏகாந்தமானது. குன்றுகளும் பாறைகளும் நிறைய உண்டு. இந்த யுத்தக் குழப்பமெல்லாம் முடியும் வரையில் நீங்கள் அங்கே இருக்கலாமென்று நினைக்கிறேன்" என்றார் பிக்ஷு.

பிக்ஷுவிடம் வர வர ஐயப்பாடு அதிகம் கொண்டு வந்த ஆயனர், "போகப் போகப் பார்த்துக் கொள்ளலாம், ஸ்வாமி!" என்றார்.

* * *

இப்படியெல்லாம் அவர்களுக்குள் இரண்டு தினங்களாகச் சம்பாஷணை நடந்திருந்தபடியால், எதிரே படை வரும் சத்தம் கேட்டதும் ஒருவேளை படையெடுத்து வரும் பாண்டிய சைன்யந்தானோ என்று ஆயனரும் சிவகாமியும் ஐயுற்றார்கள்.

ஆனால், முன்னணியில் பறந்த கொடியில் ரிஷபத்தைப் பார்த்ததும் இது பல்லவர் படைதான் என்று எல்லாருக்கும் தெரிந்து விட்டது.

இன்னும் நெருங்கி வந்ததும், படை வீரர்கள் எழுப்பிய கோஷங்களும் அதைத் தெரியப்படுத்தின.

"வாதாபி அழிக!"

"தலைக்காடு சுடுகாடு ஆக!"

"புலிகேசிக்கு விநாசம்!"

"துர்விநீதனுக்குத் துர்மரணம்!" என்னும் கோஷங்களையும், அதைத் தொடர்ந்து,

"காஞ்சி வாழ்க!"

"மகேந்திர பல்லவர் வாழ்க!"

"மாமல்லரின் வீரத் தோள் வெல்க!" என்னும் முழக்கங்களையும் மாற்றி மாற்றி அந்தப் படை வீரர்கள் எழுப்பிக் கொண்டு வந்தார்கள்.

இந்தக் குரல் ஒலிகளுக்கு இடையிடையே பேரிகை முதலிய பலவகை யுத்த வாத்தியங்கள் எட்டுத் திக்கும் எதிரொலி எழும்படி ஆர்த்தன.

மேற்படி கோஷங்கள் கேட்டபோது மரத்தின் பின்னால் மறைந்திருந்த நாகநந்தி யடிகளின் முகத்தை யாரும் பார்க்கவில்லை. பார்த்திருந்தால், படமெடுத்து ஆடும் நாக ஸர்ப்பத்தின் தீக்ஷண்யமான கண்களிலிருந்து தீப்பொறி கிளம்புவதுபோல் அவருடைய கண்களிலிருந்தும் பொறி கிளம்பிக் கொண்டிருந்ததைக் கவனித்திருக்கலாம்.

படை சின்னப் படைதான்; நாற்பது ஐம்பது குதிரைகளும் இரண்டாயிரம் காலாட்களும் இருக்கலாம். எனவே, அரை நாழிகைக்குள் நமது பிரயாணிகள் நின்றிருந்த இடத்தைத் தாண்டிப் படை சென்றது.

மாலை வெளிச்சம் விரைவாக மங்கி வந்த அந்தி நேரத்தில், போகின்ற படை கண்ணுக்கு மறைகிற வரையில், நமது பிரயாணிகள் அதே இடத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஜயகோஷங்கள், வாத்திய முழக்கங்களின் ஒலியும் வரவரக் குறைந்து கொண்டு வந்தது.

சற்று முன் கலகலப்பாக இருந்த சாலையில் நிசப்தம் குடிகொண்டது; ஒரு சிலர் அங்கு மிங்கும் விரைந்து சென்று கொண்டிருந்தாலும், பெரிய நகரத்திலிருந்து திடீரென்று நிர்மானுஷ்யமான காட்டுக்குள் வந்து விட்டதுபோல் தோன்றியது.

படை வீரர்கள் கிளப்பிய கோஷங்களில் "மாமல்ல பல்லவர் வாழ்க!" "மாமல்லரின் வீரத் தோள் வெல்க!" என்னும் கோஷங்கள் சிவகாமியின் உள்ளத்தில் பெருங் கிளர்ச்சியை உண்டுபண்ணி யிருந்தன.

மாமல்லர் அத்தகைய பயங் கொள்ளியா யிருந்தால், பல்லவ வீரர்கள் அவரைப் பற்றி இம்மாதிரி வீரகோஷங்களைச் சொல்வார்களா?

"ஆயனரே! போகலாமா? அசோகபுரம் இன்னும் ஒரு நாழிகை தூரம் இருக்கிறது!" என்று நாகநந்தியின் குரல் கேட்டது.

"போகலாம், சுவாமி! அம்மா, சிவகாமி! வண்டியில் ஏறிக் கொள், அத்தையையும் ஏறச்சொல்!" என்றார் ஆயனர்.

சிவகாமி வண்டியில் ஏறுமபோது, "அப்பா! இந்தப் படை எங்கே போகிறது?" என்று கேட்டாள்.

"எனக்குத் தெரியவில்லை, அம்மா! பார்த்தால், யுத்தத்துக்குப் போகும் படையாகத் தோன்றுகிறது. படை வீரர்களின் யுத்த கோஷங்களைக் கேட்டபோது எனக்குக்கூடக் கல்லுளியைப் போட்டுவிட்டுக் கத்தியை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று தோன்றியது. எதற்காக இப்படிப் பயந்து ஊரை விட்டு ஓடுகிறோம் என்று வெட்கமாய்க்கூட இருக்கிறது" என்றார் ஆயனர்.

"ஆயனரே? இத்தகைய சஞ்சலம் உமக்கு எப்போது வந்தது? சற்று முன்னால் அஹிம்ஸா மூர்த்தியான புத்த பகவானிடம் உமது அபார பக்தியைத் தெரிவித்துக் கொண்டீரே?" என்றார் புத்த பிக்ஷு.

அந்த சமயத்தில், சாலையில் படை மறைந்த திக்கிலிருந்து ஒரு தனிக் குதிரை வரும் சத்தம் 'டக் டக்' 'டக் டக்' என்று கேட்டது. வர வர அது சமீபித்து வந்தது.

வருகிறது யார் என்று தெரிந்து கொள்வதில் அவர்கள் எல்லாருக்குமே ஆவல் இருந்த படியால் நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தார்கள்.

குதிரை அவர்களுடைய அருகில் வந்து, குதிரை மேல் இருந்தது இன்னார் என்று தெரிய வந்ததும் ஆயனருக்கும் சிவகாமிக்கும் உண்டான வியப்புக்கு அளவே யில்லை.

ஏனெனில், குதிரை மேல் இருந்தவன், அவர்களுடைய அரண்ய வீட்டிற்குப் பரஞ்சோதி வந்த அன்று அவர்களிடம் சொல்லிக் கொள்ளாமல் மறைந்த குண்டோதரன்தான்.

"குருவே! நான் என்ன தப்புச் செய்தேன்! என்னை இப்படி அநாதையாய்க் கை விட்டு விட்டுச் சொல்லாமல் புறப்பட்டு வந்து விட்டீர்களே!" என்றான் குண்டோதரன்.

## பிரபல நாடார் திருமணம்



ருக்மணி — ஜபாக் மணி பி. ஏ.

சர். பி. டி. ராஜன் அவர்கள் தலைமையின் கீழ் திருமங்கலத்தில் 13-9-44 அன்று திருமணம் நடந்தேறியது. மணமகன் பி. கே. நாடார் ஹைஸ்கூல் கரஸ்பாண்டெண்ட் ஸ்ரீ. K. T. K. சிந்தாமணி நாடார் அவர்களின் குமாரர், மணமகள் மதுரை, வியாபாரி, ஸ்ரீ. குழந்தைவேலு நாடார் அவர்களின் குமாரி தம்பதிகளுக்கு அநேக அன்பளிப்புகளும், சர். ஆர். கே. ஷண்முகம் செட்டியார் முதலிய பிரமுகர்களிடமிருந்து வாழ்த்து செய்திகளும் கிடைத்தன. குமாரி ருக்மணியின் நாட்டியமும் இசையும் நடந்தேறியது

# ரிஷ்யசிருங்கர்

-சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்-

விஷயானுபவங்களைப் பற்றி ஒன்றுமே தெரியாதபடி மக்களை வளர்த்தால் பிரம்மசரியம் சுலபமாக ஏற்படும் என்பது சிலர் எண்ணம். இது பயனற்றது என்றும் அந்த முறையில் காக்கப்பட்ட கோட்டை வெகு எளிதாக எதிரியின் வசமாகும் என்பதையும் விளக்குவதற்காக பாரதத்தில் ஒரு ரசமான கதை உண்டு. இந்தக் கதை சுருக்கமாக இராமாயணத்திலும் இருக்கிறது. பாரதத்தில் பௌராணிகர் அதை ரொம்பச் சித்திரித்து நீண்ட கதையாகச் சொல்லுகிறார். பரிசுத்த ஆத்மாவான ரிஷ்ய சிருங்கரை அயோத்திக்கு வரவழைத்துப் பூஜை செய்ததின் பயனாக தசரதர் தம் புகழ் பெற்ற மக்களைப் பெற்றார் என்பது ராமாயணக் கதை.

* * *

அங்க தேசமானது ஒரு காலத்தில் பெரிய பஞ்சத்தால் பீடிக்கப்பட்டது. மழை யின்மையால் பயிர்கள் அழிந்து ஜனங்கள் மாண்டார்கள். பிராணிகளும் மிகவும் துன்பப்பட்டன. தேசத்தைத் துன்புறுத்தும் கொடிய பஞ்சத்தை எப்படிப் போக்குவது, பிரஜைகளைக் காப்பாற்ற என்ன செய்வது என்று ராஜா ரோமபாதன் பிராமணர்களைக் கேட்க அவர்கள், "ராஜேந்திரனே! பெண்களை அறியாதவரும் சம்பூரண பிரம்மசாரியுமான ரிஷ்யசிருங்கர் என்கிற ரிஷி குமாரர் ஒருவர் இருக்கிறார். அவரை நம் ராஜதானிக்கு வரவழைக்க வேண்டும். மிக்க தவமுள்ள அவர் நம் நாட்டில் கால் வைத்ததும், மழை பொழியும்" என்றார்கள்.

* * *

பிரம்மாவுக்குச் சமமான தேஜஸ் படைத்த விபாண்டகர் தம்முடைய புத்திரன் ரிஷ்யசிருங்கருடன் வனத்தில் வசித்து வந்தார். ரிஷ்யசிருங்கர் தன் பிதாவைத் தவிர வேறு மனிதர்களைப் பார்த்ததே கிடையாது. பெண்களைக் கண்ணால் கண்டதே கிடையாது இவ்வாறு சுத்த பிரம்மசாரியாக வளர்ந்தார் ரிஷ்யசிருங்கர்.

விபாண்டக ரிஷியின் ஆசிரமத்திலிருந்து ரிஷ்யசிருங்கரை எப்படித் தருவிப்பது என்று அரசன் மந்திரிகளுடன் ஆலோசனை செய்தான். அவர்கள் சொல்லிய உபாயத்தின்படி ராஜதானியிலுள்ள வேசிகளுள் சாமர்த்தியசாலிகளான சிலரை அழைத்து, "நீங்கள் வனம் சென்று ரிஷி குமாரனை எப்படியாவது உபாயம் செய்து என்னுடைய தேசத்திற்குக் கொண்டு வந்துவிட வேண்டும்" என்று நியமித்தான். அந்த ஸ்திரீகள் முதலில் தயங்கினார்கள். அரசன் சொல்லை மீறுவதற்குப் பயந்தார்கள். ஆனால் ரிஷியின் சாபத்துக்கும் பயந்தார்கள். முடிவில் தெய்வமே கதி என்று அரசனிடம் பொருள்களைப் பெற்றுக் கொண்டு ரிஷி ஆசிரமத்துக்குச் சென்றார்கள்.

இவ்வாறு புறப்பட்ட வேசிகளின் கூட்டத்துக்குத் தலைவியானவள் ஒரு பெரிய ஓடத்தைக் தோட்டம் போல் அமைத்தாள். அதில் போலி மரங்களும் புதர்களும் கொடிகளும் வைத்து அழகிய தோட்டத்தின் மத்தியில் ஆசிரமம் இருப்பதுபோல் செய்தாள். அந்த



ஓடத்தை விபாண்டக ஆசிரமத்தண்டை கரையில் கட்டி விட்டு, வேசிகள் ரிஷியின் ஆசிரமத்தண்டை கொஞ்சம் பதைக்கச் சென்றார்கள். முனிவர் வெளியில் போயிருந்த சமயம் பார்த்து அவர்களில் ஒரு அழகிய யுவதியை ஆசிரமத்திலிருந்த ரிஷி குமாரரண்டை அனுப்பினார்கள்.

"முனிவரே! க்ஷேமமா? கிழங்குகளும் கனிகளும் குறைவின்றிக் கிடைக்கின்றனவா? வனத்தில் ரிஷிகளுடைய தவம் சரியாக நடைபெறுகிறதா? உம்முடைய பிதாவின் தேஜஸ் குறைவின்றி வளர்கிறதா? வேத அத்தியயனம் சரியாக நடைபெறுகின்றதா?" என்று ரிஷிகளும் சீடர்களும் விசாரிக்கும் முறையில் கேட்டான் அவன்.

இதைப்போன்ற அழகிய மானிட உருவத்தையும் குரலையும் அதற்கு முன் ரிஷி குமாரர் பார்த்ததில்லை. ரிஷ்யசிருங்கருடைய உள்ளத்தில் அடக்க முடியாத இயற்கை வேகம் வேலை செய்ய ஆரம்பித்தது. வேசியாகிய யுவதியைத் தன்னைப் போன்ற ஒரு ரிஷி குமாரன் என்று எண்ணினார். உள்ளத்தில் அடக்க முடியாத ஒரு புது மகிழ்ச்சி பொங்குவதை அனுபவித்தார்.

"நீர் ஜோதியைப்போல் பிரகாசிக்கிறீர். நீர் யார்? உம்மை நமஸ்கரிக்கிறேன். உம்முடைய ஆசிரமம் எங்கே இருக்கிறது? நீர் எந்த விரதத்தை அனுசரித்து வருகிறீர்?" என்று ஆண் பெண் வித்தியாசம் அறியாத ரிஷி குமாரர் அவனைக் கேட்டார். அவனுக்கு அர்க்கியமும் பாத்தியமும் அதிதிகளுக்குச் செய்யும் உபசாரம் செய்தார்.

"இந்த இடத்துக்கு மூன்று யோஜனை தூரத்தில் என்னுடைய ஆசிரமம் இருக்கிறது. உங்களுக்கு நான் பழங்கள் கொண்டு வந்திருக்கிறேன். உங்களை நான் எங்கள் சம்பிரதாயப்படி நமஸ்கரிக்க வேண்டும். உங்களால் நான் நமஸ்காரம் பெறும் தகுதி படைக்கவில்லை" என்றான்.

நகரத்திலிருந்து கொண்டு வந்திருந்த மோதகங்களையும் பட்சணங்களையும் ரிஷி குமாரருடைய வாயில் போட்டு அவரை உண்ணச் செய்து வாசனை பொருந்திய மாலைகளைச் சூட்டி பானங்களைக் குடிக்கச் செய்து, "எங்களுடைய சம்பிரதாயப்படி நமஸ்கரிக்கும் முறை இப்படி" என்று சொல்லி அவரைக் கட்டித் தழுவி விளையாடினான்.

கொஞ்ச நேரம் கழித்தபின் விபாண்டகர் வரும் நேரமாயிற்று என்று பயந்து வேசியானவன், "நான் அக்கினி ஹோத்திரம் செய்ய வேண்டிய காலம் ஆயிற்று" என்று காரணம் சொல்லி மெதுவாக ஆசிரமத்தை விட்டு விலகிப் போய் விட்டான்.

விபாண்டகர் வந்து ஆசிரமத்தில் சிதறிக் கிடக்கும் பண்டங்களைப் பார்த்துத் திடுக்கிட்டார். ஆசிரமம் சுத்தம் செய்யப்படவில்லை. செடிகளும் கொடிகளும் ஒடிந்து கிடந்தன. ரிஷி குமாரருடைய முகம் வழக்கம்போல இல்லை. மன்மத வேகத்தினால் மதி விழுந்தவராக இருந்தார்.

"பிரிய குமாரனே! ஏன் சமித்துகள் கொண்டு வந்து வைக்கவில்லை? யார் நல்ல செடிகளை யெல்லாம் ஒடித்துப் போட்டிருக்கிறார்கள்? ஹோமம் செய்வதற்கு வேண்டிய பால் கறந்தாயிற்றா? இவ்விடம் யாராவது உனக்குப் பணிவிடை செய்ய மனிதர்கள் வந்தார்களா? இந்த விசித்திரமான பூமாலை யார் கொடுத்தார்கள்? ஏன் கவலையுற்றிருக்கிறாய்?" என்று விபாண்டகர் கேட்டார்.

"அற்புத வடிவமான பிரம்மசாரி ஒருவர் வந்திருந்தார். அவருடைய தேஜஸையும் அழகையும் குரல் இனிமையையும் என்னால் சொல்லி விளக்க முடியாது. அவருடைய வாக்கும் கண்ணும் என்னுடைய அந்தராத்மாவில் விளக்க முடியாத வண்ணம் மகிழ்ச்சியும் சிநேகமும் உண்டாக்கிற்று. அவர் என்னைக் கட்டித் தழுவிய காலத்தில் எனக்கு உண்டான சந்தோஷமும் இந்தப் பழங்கள் உண்ட போதும் உண்டாகவில்லை" என்று ஏதும் அறியாத அப்பாவியான ரிஷ்யசிருங்கர் பிரம்மசாரி என்று தான் நினைத்த வேசியின் உடையையும் உருவத்தின் அழகையும் செய்கைகளையும் தகப்பனாரிடம் சொன்னார்.

"என் தேகம் எரிவது போலிருக்கிறது. அந்தப் பிரம்மசாரியைத் தொடர்ந்து



போக வேண்டும்போல் எனக்கு இருக்கிறது. அவனை எப்படியாவது இங்கே தருவிப்பீராக. அவனுடைய விரதத்தையும் தேஜஸையும் என்னவென்று சொல்லுவேன்! அவனைக் காணாமல் என் உள்ளம் துடிக்கிறது" என்று ரிஷ்யசிருங்கர் கதறினார்.

விபாண்டகருக்கு விஷயம் தெரிந்துவிட்டது. "மகனே! இது யாரோ ராக்ஷசன் செய்த மாயை. அரக்கர் எப்போதும் தவத்துக்கு இடையூறு செய்வார்கள். பலவித உபாயங்களையும் மோசங்களையும் செய்வார்கள். அவர்களைப் பக்கத்தில் வர இடம் கொடுக்கக் கூடாது" என்று சொல்லி, மோசம் செய்தவர்களைத் தேடிப் பிடிக்க மூன்று நாள் காட்டில் திரிந்து யாரும் சிக்காமல் திரும்பினார்.

பிறகு விபாண்டகர் கிழங்கும் பழங்களும் கொண்டு வர மறுபடியும் ஒரு நாள் வெளியே போயிருந்த காலத்தில் வேசியானவள் ரிஷ்யசிருங்கர் இருந்த இடத்துக்கு மெதுவாக வந்தாள். தூரத்தில் அவள் வருவதைக் கண்டவுடனே ரிஷ்யசிருங்கர் திடீர் என்று கரை உடைந்த ஏரியினின்று தண்ணீர் ஓடுவதைப் போல் யுவதியண்டை குதித்து ஓடினார்.

"ஒளிமிகும் பிரம்மசாரியே! என் பிதா வருமுன் உம்முடைய ஆசிரமத்துக்கு நாம் இருவரும் போவோம்" என்று அவள் அழைக்காமலே ரிஷ்யசிருங்கர் அவளுடன் வேகமாகச் சென்றார்.

ஆசிரமமாகத் தோற்றம் கொடுக்கப்பட்டு நதியின் ஓரத்தில் கட்டப்பட்டிருந்த ஓடத்தில் ஏறினார்கள். ரிஷிகுமாரர் ஏறினதும் வேசிகள் ஓடத்தை அவிழ்த்துவிட்டு அங்கதேசத்து அரசனுடைய ராஜதானிக்குப் படகை ஓட்டிச் சென்றார்கள். வழியில் பல விநோதங்களைக் காட்டி ரிஷிகுமாரரை வஞ்சித்துக் கொண்டே போய் அவரை அரசனிடம் ஒப்புவித்து விட்டார்கள்.

* * *

ரோமபாதன் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினான். ரிஷிகுமாரரைத் தன் அந்தப்புரத்தில் சுகமாக அமைத்துவிட்டு அவருக்கு எல்லாப் பணிவிடையும் செய்ய உத்தரவிட்டான். அப்போதே மழை பொழிய ஆரம்பித்துவிட்டது. ஆறுகளும் ஏரிகளும் நிறைந்து பிரஜைகளும் களிப்புற்றார்கள். ரோமபாதன் தன் மகள் சாந்தாவை ரிஷிகுமாரருக்குக் கொடுத்து விவாகமும் செய்து முடித்தான்!

எல்லாம் நினைத்தவாறு முடிந்தாலும், அரசனுக்குப் பயம். விபாண்டகர் தன் மகனைக் காணாமல் தேடிக் கொண்டு வருவார், சாபம் கொடுத்துவிடுவார் என்கிற பயம். இதற்காக மந்திரிகளுடன் ஆலோசனை செய்து வனத்திலிருந்து நகரத்துக்கு வரும் வழியில் ஏராளமான காளைமாடுகளையும், பசுக்களையும் இடையர்களையும் அமைத்து, "முனி சிரேஷ்டர் விபாண்டகர் வருவார். அவரை நன்றாக உபசரியுங்கள். 'இந்தப் பசுக்களும் காளைகளும் வயல்களும் உம்முடைய புத்திரனுடையது. நாங்கள் உமக்கு அடிமைகள். உங்களுக்கு என்ன செய்யவேண்டும்?' என்று அவர் கோபம் தணியுமாறு பேசுங்கள்" என்று எச்சரிக்கை செய்து ஏற்படுத்தி வைத்தான்.

எங்கு தேடியும் மகனைக் காணாமல் உக்கிரமான கோபத்தை அடைந்த விபாண்டகர், அங்கத ராஜன் வேலையாகத்தான் இருக்கும் என்று சந்தேகங்கொண்டு அரசனை எரிப்பதற்குப் போவதுபோல் ஆறுகளையும் கிராமங்களையும் தாண்டி அரசனுடைய நகரத்தை நோக்கிச் சென்றார்.

அரசன் கட்டளைப்படி, வழியில் கோபாலர்கள் முனிவரை உபசரிக்கவே, அவர் பெரும்பாலும் கோபம் தணிந்து ராஜதானியை அடைந்தார்.

சுவர்க்கத்தில் தேவேந்திரன் இருப்பதைப்போல் அரசன் மாளிகையில் தம்முடைய புத்திரன் இருப்பதைக் கண்டார். மின்னலைப் போன்ற வடிவத்தோடு ஜொலிக்கும் ராஜகுமாரி சாந்தாவும் பாணிக்கிரகணம் செய்யப்பட்ட மனைவியாக மகனுடன் அமர்ந்திருப்பதையும் கண்டார்!

விபாண்டகர் அரசனை அனுக்கிரகம் செய்தார். புத்திரனைப் பார்த்து, "இந்த அரசனுக்குப் பிரியமான எல்லாவற்றையும் செய். ஒரு புத்திரன் பிறந்தவுடன் வனத்துக்கு மறுபடியும் வந்து சேருவாயாக" என்றார். அவ்வாறே ரிஷ்யசிருங்கரும் செய்தார்.

"நளனுக்குத் தமயந்தியும் தசரத குமாரனுக்குச் சீதையும், வசிஷ்டருக்கு அருந்ததியும் அகஸ்தியருக்கு லோபாமுத்திரையும் போல், யுதிஷ்டிரனே! உனக்குத் திரௌபதியும் போல், சாந்தா ரிஷ்யசிருங்கருடன் வனத்திற்குச் சென்று பிரீதியுடன் பணிவிடை செய்து தவத்தில் பங்கு பெற்றாள். ரிஷ்யசிருங்கருடைய ஆசிரமம் இருந்த இடம் இது. இந்த நதிக் கரையில் இறங்கி ஸ்நானம் செய்து பரிசுத்தனாகக் கடவாய்" என்று லோமசர் யுதிஷ்டிரனுக்குக் கதையைச் சொல்லி முடித்தார். பாண்டவர்கள் அங்கே ஸ்நான ஜபங்கள் முடித்தனர்.




காலை பத்து மணியிருக்கும். ஹரிஹர அய்யர் காப்பி சாப்பிட்டதும் வழக்கம் போல் திண்ணையில் உட்கார்ந்து பத்திரிகை பார்த்துக் கொண்டிருந்தார்.

"ஸார், போஸ்ட்!" என்ற குரல் கேட்டு நிமிர்ந்தார். தபால்காரன் ஒரு கவரைக் கொடுத்துச் சென்றான். ஐயர் கவரைப் பிரித்துப் படித்தார். படித்ததும் அவர் மனம் கவலையில் ஆழ்ந்தது.

அப்பொழுது ஏதோ காரியமாய் வாசலுக்கு வந்த அவர் மனைவி சீதம்மாள் அவர் கையில் இருந்த கடிதத்தையும் அவர் முகத்தையும் பார்த்துத் திடுக்கிட்டவளாய், "என்ன? லெட்டர் மாப்பிள்ளையிடமிருந்தா?" என்றாள்.

மௌனமாக ஹரிஹர அய்யர் அந்தக் கடிதத்தை அவள் கையில் கொடுத்தார்.

"மாமா அவர்களுக்கு, ரமணி அநேக நமஸ்காரம். கல்யாணி இங்கு வந்ததிலிருந்து ரொம்பத் துயரத்தில் ஆழ்ந்தவள்போல் இருக்கிறாள். அவளுக்குக் குதூகலமோ கலகலப்போ ஒன்றும் இல்லை. காரணம் தெரியவில்லை. நான் அவளை எவ்வளவோ சந்தோஷப்படுத்த முயன்றும் ஒன்றும் முடியவில்லை. தாங்கள் வந்து அவளுக்குப் புத்தி சொல்லிவிட்டுப் போகவும்.

ரமணி."

கடிதத்தைப் படித்து முடித்ததும் சீதம்மாள், "இப்படியும் ஒரு அசட்டுப் பெண் உண்டா? ரமணிக்கென்ன? கண்ணுக்கு லட்சணமாயிருக்கிறான், நல்ல வேலை. அவன் தாயாரும் ரொம்ப நல்ல மாதிரி. இவள் ஏன் இப்படியிருக்க வேண்டும்?" என்றாள்.

"எல்லாம் உன்னால் வந்ததுதான்!" என்றார் ஹரிஹர அய்யர்.

ஹரிஹர அய்யர் தஞ்சைக் கருகில் உள்ள கணபதி அக்ரஹாரத்தில் ஒரு மிராசுதார். கல்யாணி அவருக்கு ஒரே பெண். சாரங்கன் அவருக்கு அத்தை மகன். அவர் அத்தை சாகும் தருவாயில் தமக்கு இருந்த கொஞ்சம் சொத்தையும் ஏழு வயதுக் குழந்தையான சாரங்கனையும் அவர் வசம் ஒப்புவித்து விட்டுச் சென்றார்.

சாரங்கன் வரும் பொழுது கல்யாணி ஒரு வயதுக் குழந்தை. அவளுக்கு ஐந்து வயதானதும் இருவரும் சேர்ந்து பள்ளிக்கூடம் போவார்கள். கல்யாணி அவனை விட்டுப் பிரியவே மாட்டாள். அவளுக்குத் தெரியாத பாடங்களை சாரங்கன் சொல்லிக் கொடுப்பான். வயது ஆக ஆக இருவரும் ரொம்பப் பிரியமாயிருந்தார்கள். கல்யாணிக்கு வயது பதினைந்து ஆகிவிட்டது. அவன் நல்ல லட்சணமுள்ளவனாகவும் சூடிகையாகவும் இருந்தான். சாரங்கன் எஸ். எஸ். எல். ஸி. வரை படித்து விட்டு, மேலே படிக்க முடியாததால் அசலூரில் வேலையாக இருந்தான்.

இவர்கள் அன்பையும் ஒற்றுமையையும் பார்த்து ஐயர், இருவரையும் தம் பதிகளாக்கி, குழந்தைகளைத் தம் மிடத்திலேயே வைத்துக் கொள்ளலாம் என்று நினைத்தார்.

ஆனால் சீதம்மாளுக்குச் சம்மதம் இல்லை. சாரங்கனுக்குப் படிப்பு அதிகமில்லையென்றும், அவளைப் பட்டணவாசத்தில் உள்ள நல்ல உத்தியோகத்திலிருப்பவனுக்குத்தான் கொடுக்க வேண்டும் என்றும் அவள் சொன்னாள்.

ஐயர் பல இடங்களில் வரன் பார்த்துக் கடைசியில் ஒரு வரன் கிடைத்தது. ரமணிக்குச் சென்னைப் பட்டினத்தில் ஒரு ஆபீஸில் வேலை. முன்னூறு ரூபாய் சம்பளம். சொத்தும் இருந்தது. எல்லாம் திருப்தியாக இருந்ததால் ஐயருக்கும் மனது மாறி விட்டது. கல்யாணம் நிச்சயம் ஆகிவிட்டது.

கல்யாணம் ஆகி நாலு மாதம் கழித்துக் கல்யாணியைப் புக்ககத்துக்குக் கொண்டு வந்து விடும்படி கடிதம் வந்தது. ஹரிஹர அய்யர் பெண்ணை அழைத்துக் கொண்டு புறப்பட்டார். "போய் வருகிறேன், அம்மா!" என்று சொல்லும் பொழுது, கல்யாணி 'ஓ' வென்று அழுது விட்டாள். சாரங்கனிடம் சொல்லிக் கொள்ள முடியாமல் துக்கம் நெஞ்சை அடைத்தது. "அழாதே, அசடு மாதிரி! நாங்கள் அடிக்





கடி. வந்து பார்த்துக் கொள்கிறோம்" என்று சீதம்மாள் அவளைத் தேற்றினாள்.

கல்யாணி புக்ககம் போனதும் ஹரிஹர அய்யர் சகுந்தலையைப் பிரிந்த கண்வரின் நிலையை அடைந்தார்.

○

கல்யாணி ஊருக்குப் போய் இரண்டு மாதம் கழித்துத்தான் மேற் சொன்ன கடிதம் வந்தது. இவர் அன்றே பட்டணத்துக்குச் சென்று கல்யாணியை அழைத்துக்கொண்டு திரும்பி வந்தார்.

கல்யாணி வந்து ஒரு வாரம் ஆயிற்று. சீதம்மாள் மெதுவாக அவளிடம் சென்று பேச்சை ஆரம்பித்தாள்.

"கல்யாணி! நீ வந்ததிலிருந்து உன்னைக் கேட்க வேண்டும் என்று இருந்தேன். நீ புக்ககத்தில் சந்தோஷமே யில்லாமல் இருக்கிறாயாமே! மாப்பிள்ளை எழுதியிருக்கிறாரே, ஏன் அப்படி யிருக்கிறாய்?" என்றாள் சீதம்மாள்.

"ஒன்றுமில்லை அம்மா!" என்று புன்னகையுடன் சொன்னாள் கல்யாணி.

"கல்யாணி! எனக்கு எல்லாம் தெரியும். ஆனால் புருஷன் வீட்டுக்குப் போனதும் அவர்களைச் சந்தோஷப் படுத்துவது ஒன்றுதான் உன் எண்ணமாயிருக்க வேண்டும். பிறந்தகத்தைப் பற்றி எண்ணிக் கொண்டும் கண்ணீர் விட்டுக் கொண்டும் இருப்பது நன்றாயிருக்காது. நீ ஏன் இப்படி அசடாகப் போய்விட்டாய்?" என்று சாரங்கன் விஷயத்தை மறைமுகமாகக் குறித்துச் சொன்னாள் சீதம்மாள்.

"அம்மா! நான் எப்படி உங்களையெல்லாம் மறப்பேன்? இந்த மனம் அதற்கு இடங் கொடுக்குமா? ஒவ்வொரு நிமிஷமும் இந்த வீட்டு ஞாபகம்தான். நான் எவ்வளவுதான் மறக்கப் பார்த்தாலும் முடியவில்லையே!" என்று கண்ணீர் வடித்தாள் கல்யாணி.

அதற்கு மேல் சீதா பேசவில்லை. கல்யாணி சாரங்கனை நினைத்து உருகுகிறாள் என்பது அவளுக்கு நிச்சயமாகத் தெரிந்து போயிற்று.

○

சீதம்மாளுக்கும் ஹரிஹர அய்யருக்கும் என்ன செய்வதென்றே புரியவில்லை. குழந்தை வந்து இருபது நாள் ஆகிறதே, மாப்பிள்ளையிடமிருந்து கடிதம் வந்தால் கொண்டுபோய் விடவேண்டுமே என்று தவித்தார்கள். ஆனால் கல்யாணியின் சிரிப்புச் சத்தம் கேட்கும் பொழுது அவள் ஊருக்குப் போய் விடுவாளே, இனிமேல் அவள் சிரிப்பை எப்பொழுது கேட்கப் போகிறோம் என்று நினைந்து வருந்தினார்கள்.

இப்படி அவர்கள் நினைத்த இரண்டு நாளைக்குள்ளேயே கல்யாணியின் சிரிப்பைக் கேட்க முடியவில்லை. கல்யாணி ஊருக்குப் போய் விட்டதால் அல்ல. ஏனோ திடீரென்று கல்யாணியின் சந்தோஷத்துக்குத் தடை ஏற்பட்டு விட்டது.

இதைப் பார்த்த ஹரிஹர அய்யரின் மனம் பகீரென்றது. அவர் தம் மனைவியைப் பார்த்து, "உன்னைத்தானே! குழந்தை ஏன் கலகலப்பே இல்லாமல் இருக்கிறாள்? பட்டணத்துக்குப் போக



வேண்டும் என்று எண்ணினதுமே அவனுக்குத் துக்கம் வந்துவிட்டதா? சாரங்களை நாம் வளர்த்தது நமக்கே கெடுதலாக முடிந்து விட்டதே!" என்று வருந்தினர்.

இதைக்கேட்ட சீதம்மாளுக்குப் பெண்ணின் பேரில் ஆத்திரம் வரத்தான் செய்தது. ஊஞ்சலில் உட்கார்ந்து குருட்டு யோசனை செய்து கொண்டிருந்த கல்யாணியிடம் போனாள்.

"ஏன் உனக்கு வரவரப் புத்தி இப்படிப்போகிறது?" என்று கோபமாகப் பேச்சை ஆரம்பித்தாள் தாயார்.

"எப்படிப் போகிறது?" என்றாள் கல்யாணி இடக்கிட்டவளாய்.

"எதற்காக இப்படிக் கவலைப் பட்டுக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டாள் தாயார்.

"ஒன்றுமில்லை, அம்மா! நான் வந்து ஒரு மாதம் ஆகப்போகிறது, கடிதமே வரவில்லையே!" என்றாள் கல்யாணி. அப்பொழுது அவள் முகம் வெட்கத்தால் சிவந்தது.

"யாரிடமிருந்து?" என்று ஒன்றும் தெரியாதவள்போல் கேட்டாள் தாயார்.

"அவரிடமிருந்துதான்! நீ போய்ப் பதினைந்து நாளைக் கெல்லாம் உன்னைக் கொண்டுவந்து விடும்படி கடிதம் எழுதுகிறேன் என்று சொன்னார். இன்னும் எழுதவில்லையே! முற்றத்தில் துளசிச் செடியும் கனகாம்பரமும் வைத்தேன். அதற்குத் தண்ணீர் யாராவது விடுகிறார்களோ இல்லையோ? அவர் மேஜைக்கு ஒரு விரிப்புப் பின்னினேன். அதை முடிக்கக்கூட இல்லை" என்றாள் கல்யாணி.

"இவ்வளவு ஆசையுள்ளவள் அங்கே ஏன் துக்கப்பட்டுக் கொண்டிருக்க வேண்டுமாம்?" என்றாள் சீதம்மாள்.

"ஏன் என்று தெரியவில்லையா, அம்மா! அங்கே போனால் உங்களைப் பிரிந்து இருக்க முடியவில்லை; இங்கே வந்தால்....." என்று கூறி நிறுத்தினாள் கல்யாணி.

அதற்குமேல் சீதம்மாள் அங்கே நிற்கவில்லை. அவள் வேகமாக திண்ணைக்குப் போய்த் தன் கணவனிடம் நடந்ததைக் கூறிவிட்டு, "பார்த்தீர்களா, என்னைக் குற்றம் சொன்னீர்களே! அவளுக்கு இங்கே அகமுடையானைப் பிரிந்து இருக்க முடியவில்லையாம்!" என்று பெருமையோடு கூறினாள்.

அதைக் கேட்ட ஐயர் சந்தோஷத்துடன், ஆறுதலுடன் "நல்ல வேளை, அசட்டுத்தனமாய் நாம் ஏதோ நினைத்துக் கொண்டு அவஸ்தைப் பட்டது கல்யாணிக்குத் தெரிய வேண்டாம்!" என்றார் மெதுவாக.

இந்தச் சமயத்தில், "என்ன சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள், அப்பா?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள் கல்யாணி.

"ஒன்றுமில்லை, கல்யாணி! உன் அம்மா தீபாவளிக்கு உன் கைக்கு வங்கி பண்ண வேண்டும் என்கிறாள், அவள் காலத்து வழக்கப்படி. நான் உனக்கு ஏதாவது புது மோஸ்தரில் சங்கிலி பண்ணலாம் என்று சொன்னேன்!"

"அப்பா, எனக்கு வங்கியும் வேண்டாம், சங்கிலியும் வேண்டாம். ஒரு வைர மோதிரம் மட்டும் தீபாவளிக்குப் பண்ணிக் கொடுத்து விடுங்கள். அவர் வெகு நாளாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார், வைர மோதிரம் வேண்டுமென்று. தீபாவளிக்கு வாங்கிக் கொடுத்தால் எவ்வளவோ சந்தோஷமாயிருக்கும்."

"அப்படிச் சொல்லு. ஆரம்பித்து விட்டாயா, அவனுக்குச் சிபார்சு பண்ண?" என்றார் ஹரிஹரையர் சந்தோஷத்துடன். எல்லோருடைய முகமும் சந்தோஷத்தால் மலர்ந்தது.



# சோதிடந் தேவையில்லை

சமீபத்தில் விலைவாசிகள் உயருமா குறையுமா என்பதுபற்றி யாரும் உங்களுக்குச் சோதிடம் சொல்லவேண்டியதில்லை. 1943-ம் வருஷ அனுபவத்திலிருந்து, விலைவாசிகள் கண்டிப்பாகக் குறையுமென்று அனைவருக்கும் தெளிவாய்த் தெரியும். எங்கு பார்த்தாலும் விலைவாசிகள் குறைவதற்கான அறிகுறிகள் தோன்றுகின்றன. விலைவாசிகளைக் கட்டுப்படுத்தியதனாலும், கொள்ளை லாபமடிக்கிறவர்கள் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டதனாலும்தான் இந்த நிலைமை ஏற்பட்டது. விலைவாசிகளின் குறைவு உங்களைப் பாதிக்காதபடி காப்பாற்றிக் கொள்ளுங்கள்.

உங்களுடைய பணத்தை செல்பொருட்கள், பண்டங்கள், நிலம், கட்டடங்கள், நகைகள் முதலியவற்றில் முடக்க இதுவல்ல சமயம். நாட்செல்லச் செல்ல அவற்றின் விலைகள் கட்டாயம் குறையும். இப்போது ரூபாய் 100-க்கு வாங்கும் ஒரு பொருளின் விலை, இன்னும் ஒரு வருஷத்தில், ரூபாய் 70-க்கும் குறைவாக ஆகிவிடும். இக்காலத்திற்கு, இன்ஷியூரன்ஸ், கூட்டுறவு சங்கங்கள், சேமநிதி, தபாலாபீஸ் சேமநிதி, அரசாங்கக் கடன் பத்திரங்கள், நேஷனல் சேவிங்ஸ் செர்டிபிகேட் ஆகியவையே தகுந்த முதலீடுகளாகும்.

## உங்களால் இயன்றவரை மிச்சப் படுத்துங்கள்.

## மிச்சப் படுத்தியதை முதலீடு செய்யுங்கள்.

தனி, தொழிலும் செய்யப்பட்ட பொருட்கள், துணிமணி, மருந்துகள், உணவுப் பொருட்கள் முதலியவற்றின் விலைகள் குறைகின்றன. கட்டுப்பாடு விதிகள் பெருக்கப்பட்டு கண்டிப்பாக அமுல் நடத்தப்படுகின்றன. விலைவாசிகள் இன்னும் குறைவது நிச்சயம்.

**தேசீயப் போர்முனையார் விடுக்கும் தேசீய வேண்டுகோள்**

AAA 1115 TM

# காலக்ஷேபம்

## சரியான பதில்

ஒரு தமிழ்ப் பண்டிதர் வகுப்பில் இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்பவைகளை விரிவாகக் கூறினார். "'டேய்! அவன் கலியாணம் செய்து கொண்டான்' என்ற வாக்கியத்தில் எந்தக் காலம் விளங்குகிறது?" என்று கேட்டார்.

பையன்:—அதில் அவனுடைய போதாத காலம்தான் விளங்குகிறது ஸார்!

—சௌந்திரா.

★

## புது ஸைக்கிள்

"டேய் ராமா! ஏதுடா புது ஸைக்கிள், எப்போது எடுத்தாய்? எவ்வளவுடா......"

ராமன்:—இப்போதுதான் எடுத்தேன்; புத்தம் புதிசு. உனக்கும் இந்தமாதிரி ஒன்று வேண்டுமா? வேண்டுமானால் மூன்றணா கொடு. இரண்டு மணி நேரம் வாடகைக்கு எடுத்துத் தருகிறேன்.

—ஜி. பெருமாள் சாமி.

★

## தென்னாலி ராமன்!

கோனான் (தன் மகனிடம்):—டேய்! தவிட்டுக்குத் தண்ணீர் ஊற்றினாயா?

மகன்:—ஆமாங்க......

கோனான்:—தொட்டிக்குத் தண்ணீர் ஊற்றினாயா?

மகன்:—ஆமாங்க......

கோனான்:—பாலுக்குத் தண்ணீர் ஊற்றினாயா?

மகன்:—ஆமாங்க......!

கோனான்:—பேஷ்! இனிமேல் நீ பால் விற்கலாம்!

—யு. ஆர். கிருஷ்ணமூர்த்தி.

★

## காணோமே!

தலைமை ஆசிரியர் (தன் உதவி உபாத்தியாயரிடம்):—நேற்று ஆஜர் போட்டு விட்டு, அப்புறம் வகுப்பிற்கு வரவில்லையாமே; சொல்லாமல் எங்கே போனீர்கள்?

உதவி உபாத்தியாயர்:—நேற்று பட்டிராஜு பாகவதரின் பாட்டுக் கச்சேரியில், உங்களுக்குப் பின்னால்தான் உட்கார்ந்து இருந்தேன்.

—தா. மா. வாசன்.

## வந்த காரணம்!

முதல் குற்றவாளி:—நான்தான் ஒரு பாங்கியைக் களவாடியென்று அகப்பட்டுக் கொண்டேன். நீர் என்ன குற்றம் செய்தீர் ஐயா?

இரண்டாவது குற்றவாளி:—நான்தான் அந்தப் பேங்கின் கேஷியர்!

—சி. ஆர். சம்பகம்.

★

## எடுத்த காரணம்!

நண்பன்:—இந்தக் குளம் ரொம்ப ஆழமானதால் ஆபத்தும் நிறைய உண்டு.

மற்றவன்:—அப்படியானால் "குளம் ரொம்ப ஆழம், ஜாக்கிரதை" என்று ஒரு போர்டு ஏன் தொங்கவிடக் கூடாது.

நண்பன்:—கடந்த இரண்டு வருஷமாக இருந்தது. ஆனால் இந்த இரண்டு வருஷத்தில் ஒருவரும் குளத்தில் விழுந்து உயிரை விடாததால் போர்டை எடுத்து விட்டார்கள்.

—எம். பி. துரைசாமி.

★

## வெளிச்சம் வேண்டாமா?

பெரிய தீ விபத்து ஏற்பட்டு நடு இரவில், தீ பரவிக் கொண்டிருந்தது. பக்கத்திலிருந்தவர்கள் எல்லாரும் தீயை அணைப்பதில் முனைந்திருந்தனர்.

ஒருவன்:—தீயை முழுவதும் அணைத்துவிடாதீர்கள்.

மற்றவன்:—ஏன்?

ஒருவன்:—தண்ணீர் கொண்டு வருவதற்கு இருட்டில் வெளிச்சம் தெரிய வேண்டாமா? அதற்காகத்தான். —எம். பி. டி.

★

## உண்மை தெரிந்தது!

ஓட்டல்காரர்:—என்ன, கணபதி ஐயர்! நம்ம ஓட்டலிலே சாப்பிட்டால் உடம்பு கல்லு மாதிரி இருக்கும்.

கணபதி ஐயர்:—அப்படிச் சொல்லும்! என்னடாப்பா சாப்பாட்டிலே நிறைய கல்



அகப்படுகிறதே என்று பார்த்தேன். இப்போதுதான் தெரிகிறது!

—நாகலக்ஷ்மி ஜயராமன்.

# மனித யந்திரம்

விந்தன்

அன்றொரு நாள் பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருந்தபோது, "ஒரு காலணா இருந்தால் கொடு, ஐயா!" என்று குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். ஒரு சின்னஞ் சிறு சிறுமி எனக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஏனெனில், அவள் என் நண்பன் சிவராமனின் செல்வக் குழந்தை! — இந்த கதி அவளுக்கு எப்படி வந்தது?

"கஸ்தூரி! என்னைத் தெரிகிறதா, உனக்கு?"

"தெரிகிறது, மாமா!"

"அம்மா, அப்பா எல்லாம் எங்கே?"

"அம்மா வீட்டில் இருக்கிறாள்; அப்பா ஆஸ்பத்திரியில் இருக்கிறார்."

"அப்பா ஏன் ஆஸ்பத்திரிக்குப் போனார்?"

"அவருக்குக் கால் என்னத்துக்கோ நடக்க வராமற் போச்சு! அதாலே அவர் ரெண்டு மாசமா ஆஸ்பத்திரியிலேதான் இருக்கிறார்."



"சரி! வா, வீட்டுக்குப் போவோம்" என்று நான் அந்தச் சிறுமியைக் கூட்டிக் கொண்டு சென்றேன்.

★

என் நண்பன் சிவராமன் 'பரஞ்சோதி மில்ஸ்'ஸில் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். முப்பது ரூபாய் சம்பளம். இந்தச் சம்பளத்தைக் கொண்டு, அவன் வாழ்க்கையில் என்னவெல்லாம் செய்ய வேண்டியிருந்தது!

வாரத்தில் ஆறு நாட்கள் ஜலமுஞ் சாதம் சாப்பிட்டாலும், ஒரு நாளாவது அவன் வத்தக் குழம்புஞ் சாதம் சாப்பிட வேண்டும். நடு நடுவே உடம்புக்கு ஏதாவது வந்தால் அதையும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

மாமாங்கத்துக்கு ஒரு முறையாவது புதுப் புடவை எடுத்துக் கொடுப்பதின் மூலம், அவன் தன் மனைவியின் மனதைத் திருப்தி செய்ய வேண்டும். தங்க வளையல்களுக்குப் பதில் கண்ணாடி வளையல்களாவது வாங்கிப் போட வேண்டும். ஸினிமா, நாடகம், சர்க்கஸ் போன்ற தமாஷாக்களை அவன் ஜன்மத்தில் ஒரு தடவையாவது பார்க்கச் செய்ய வேண்டும். தன் பெண் விளையாடுவதற்காக. அவன் 'ஸெலூலாய்ட்' பொம்மை, மூன்று சக்கர ஸைக்கிள் முதலியவைகள் வாங்கித் தராவிட்டாலும், மரப்பாச்சி, கிலுகிலுப்பையாவது வாங்கித் தரவேண்டும். வீடு தேடி வரும் விருந்தாளிகளை மனங் கோணாமல் உபசரிக்க வேண்டும். பந்து மித்திரர்கள் அடிக்கடி நடத்தும் கல்யாணம், கர்ணவேதனம், சீமந்தம் முதலிய விசேஷங்களில், மூக்கால் அழுது கொண்டாவது அவன் சன்மானம் செய்ய வேண்டும்! — அப்பப்பா! வாழ்க்கையில் இத்தனை கஷ்டங்களுக்கும் ஒரு ஏழைத் தொழிலாளி ஈடு கொடுப்பது எப்படி? இந்தக் கஷ்டங்களையெல்லாம் அளவுகோலாக வைத்துக் கொண்டா முதலாளிகள் தொழிலாளிகளுக்குச் சம்பளம் கொடுக்கிறார்கள்?

இந்த லட்சணத்தில் அப்பா இரண்டு மாத காலம் ஆஸ்பத்திரியில் இருக்

தால் பெண் ஏன் பிச்சை எடுக்க வர மாட்டாள்?

★

சிநேகிதனின் வீட்டை அடைந்தேன். அவனுடைய அம்மா என்னைக் கண்டதும், "வாருங்கள், அண்ணா! மன்னி சௌக்கியமா?" என்று அன்பே வடிவமாய் என்னை வரவேற்றான்.

அவனைப் பிடித்திருந்த வறுமை அன்பை மட்டும் பாதிக்கவில்லை போலிருக்கிறது!

"கஸ்தூரியின் கதி ஏன் இப்படியாச்சு?" என்று நான் விசாரித்தேன்.

"கால வித்தியாசம், அண்ணா! அவர் சம்பாதிக்கும் போதே கையில் ஒரு காலணாவும் மிச்சமாயிருக்காது. இப்பொழுது கேட்க வேண்டுமா? அவர் பாயும் படுக்கையுமாகி விட்டார். வேறு வழியில்லாமல் நான் இரண்டு பெரிய மனிதர்கள் வீடுகளில் வேலை செய்து வருகிறேன். நான் வேண்டாமென்று சொன்னாலும் கேட்காமல், கஸ்தூரியும் என்னுடைய கஷ்டத்தில் பங்கெடுத்துக் கொள்கிறாள். அதுதான் அவளுடைய கதி!"

"ஏன், இந்தச் சமயத்தில் பரஞ்சோதி உபகாரச் சம்பளம் ஒன்றும் கொடுத்து உதவி செய்யவில்லையா?"

"ஐயோ! உபகாரச் சம்பளம் கொடுக்காம விருப்பதோடு நின்றால் போதுமே! 'அவருக்காக வேலை காத்திருக்காது!' என்று வேறே சொல்கிறார்களாமே!"

என்ன அநியாயம்! கேவலம், ஒரு 'மெஷின்' வேலை செய்வதற்கு லாயக்கில்லாமற் போனால், அதைப் பழுது பார்க்க ரூபாய் ஆயிரம் வேண்டுமானாலும் எந்த முதலாளியும் செலவழிக்கத் தயாராயிருக்கிறான். ஆனால், வாழ்நாள் முழுதும் தன்னிடம் நாயாயுழைத்த ஒரு ஏழைத் தொழிலாளி வேலை செய்வதற்கு லாயக்கில்லாமற் போனால், அவனுக்காக ஒரே ஒரு ரூபாய் செலவழிக்கக் கூட மனம் வருவதில்லை! — மனிதன் யந்திரத்தைவிட அவ்வளவு மட்டமானவனா? இரும்பு யந்திரத்தை வேண்டுமானால் மனிதன் நினைத்தால் சிருஷ்டித்து விடலாம்; மனித யந்திரத்தை மனிதன் நினைத்தால் சிருஷ்டித்துவிட முடியுமா?

இப்படியெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டே நான் உட்கார்ந்திருந்த போது, நொண்டிக் கொண்டே என் நண்பன் உள்ளே நுழைந்தான். அவன் சொன்ன சேதி என்னைத் திடுக்கிட வைத்தது. "நான் இனி முடவன். என் கைகளும் கால்களும் சரிப்பட்டு வராதென்று டாக்டர்கள் சொல்லி விட்டார்கள்!" என்றான் அவன்.



"ஏண்டா, வீடு ஒழுகுதே, இதற்கு ஏதாவது செய்டான்னு பூந்தொட்டியைத் தூக்கிண்டு வறியே?"

"செடிக்குத் தண்ணி விடல்லேன்னு சாயந்திரம் சொன்னியே! இரண்டு வேலையும் சேர்த்தாப்போல முடியட்டுமென்றுதான் கொண்டு வந்து வைக்கிறேன்."

அதைக் கேட்ட அவன் மனைவி கற்சிலை போல் கண் கலங்கி நின்றாள்.

★

எதிர் பாராத விதமாக, மறுநாள் பரஞ்சோதியிடமிருந்து என் நண்பன் சிவராமனுக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில், தன்னை வந்து பார்க்கும்படி அவர் எழுதியிருந்தார்.

சிவராமன் என்னையும் கூட்டிக் கொண்டு அவரிடம் சென்றான். அவர் என் நண்பனைக் கண்டதும், "நான் ஊருக்குப் போய் நேற்றுத்தான் வந்தேன். மானேஜர் உன்னைப் பற்றி என்னிடம் சொன்னார். என்னமோ உன் உடம்புக்கு அப்படி வந்து விட்டது. இனிமேல் நீ வேலை செய்வது முடியாத காரியம். ஆகவே, உனக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கும்படி உத்தரவிட்டிருக்கிறேன். பெற்றுக் கொண்டு, இனிமேல் உன் காலத்தைக் கழிப்பதற்கு ஏதாவது வழி தேடிக் கொள்" என்று கனிவு ததும்பக் கூறினார்.

"எனக்கா ஆயிரம் ரூபாய்!" என்றான் என் நண்பன் ஆச்சரியத்துடன்.

"ஆமாம், உனக்கேதான்!" என்றார் பரஞ்சோதி அழுத்தந் திருத்தமாக.

அந்த அதிர்ச்சியில் இரண்டு மாத காலமாகச் செயலற்றுக் கிடந்த அவன் கைகளும் கால்களும் புத்துயிர் பெற்று விட்டன! அவன் புனர் ஜன்மம் எடுத்து விட்டான்.

பணத்தின் சக்தியா அவனை அப்படி மாற்றிவிட்டது? இல்லை, அன்பின் சக்தி என்றுதான் அதைச் சொல்ல வேண்டும்.

# மகான் ராஜமையர்

— சுவாமி சுத்தானந்த பாரதி —

பி. ஏ. மூறுக்கு; மாமழுங்காத சட்டை; ஷெல்லி, பைரன், கீட்ஸ், கம்பனில் ஆழ்ந்த கலைக் கனவு; தன் கலைத் திறமையால் சிகாகோவையும் லண்டனையும் ஒரு கை பார்க்க வேண்டும் என்ற பெரிய எண்ணம்; கடவுள், சமயம், ஆசாரம் எல்லாம் கண்மூடித் தனங்கள் என்ற நாஸ்திகம் — இவையே பத்தலகுண்டு ராஜத்தின் இளமை. தம் புகழைக் கடல் தாண்டிக் கொண்டு போக வேண்டுமென்று ராஜம் கருதினார். சட்டக் கல்லூரியில் படித்துப் பெரிய வக்கீலாகி ஹைகோர்ட்டையும் தமது ஆங்கிலத்தால் ஆள ஆசை கொண்டார். பி. எல். பரீக்ஷைக்கு எழுதினான்; தேறவில்லை. ஆசை அவலமாயது. துக்கம் நெஞ்சை யடைத்தது. ஆளே சாரிப் போனார். கலைக் கனவுகளெல்லாம் வேதாந்தப் பித்தமாய் விட்டது.

1892-ம் ஆண்டு விவேக சிந்தாமணியில் ராஜமையர் தமது சித்த நிலையையே கமலாம்பாள் என்ற தொடர் கதையாக எழுதினார். முதல்தரமான ஆங்கிலக் கதைக்கும் இது அரிய விருந்தாகும் என்றார் மேதாவி சுந்தரம் பிள்ளை. கிறிஸ்துவக் கல்லூரிப் பத்திரிகையில் பூண்டி அரங்கநாத முதலியாரின் திருக் கச்சிக் கலம்பகத்திற்கு அற்புதமான விமர்சனம் எழுதினார். அதை மெச்சாதவரில்லை.

படிப்பது வேதாந்தம். நினைப்பது முக்தி, தேடுவது ஒரு குருவை. அந்தக் காலம் மயிலாப்பூர் வக்கீல்களும் உத்தியோகஸ்தர்களும் பிரம்மஞான சபைப் பிரசங்கம் கேட்டு அலுத்து, தமது வேதாந்த மார்க்கத்தை உபதேசிக்கத் தக்கவர்களை நாடினார்கள். வந்தார் சாந்தானந்தர் பி. ஏ. கல்வி படிப்பாளி, ஆத்ம ஞானி. ராஜமையர் இந்த மகானைக் காண விரும்பினார்.

அப்போது பரிவ்ராஜகரான விவேகானந்தர் சென்னைக்கு வந்தார். இங்கே தமது கொள்கை பரவ பிரம்மவாதின் என்ற ஆங்கிலப் பத்திரிகையைத் தொடங்கினார். ஐயர் ஆனந்தரைப் பார்த்து வேதாந்த வெறி கொண்டார். நண்பர்கள் தூண்டுதலின் பேரில் அப்பத்திரிகைக்கு ஐயர் ஒரு கட்டுரை இறக்கித் தந்தார். மனிதனின் சிறுமையும் பெருமையும் என்ற அந்தக் கட்டுரை பலர் கவனத்தை இழுத்தது.

சாந்தானந்த சுவாமிகள் அதைப் பார்த்தார். "இதை எழுதிய ராஜமையர் யார்? அவரைக் காண வேண்டும்" என்றார். சுவாமிகளின் சிஷ்யர்கள் ராஜமையரைத் தேடி வந்தார்கள்.

"ஆஹா! கும்பிடப்போன தெய்வம் கூப்பிட்டழைத்தது" என்று ஐயர் விரைந்து சென்றார். சுவாமிகள் ஐயரின் கட்டுரையை மெச்சினார். பக்குவத்தைப் பார்த்தார். "அப்பனே! நீ நிரம்ப சிரவணம், மனன நிதித்யாஸம் செய்ய வேண்டும்; வெறும் படிப்பாலும் பெருமூச்சாலும் ஞானம் வராது. தத்துவம் உன்னுள் நீயாக உள்ளது. தானான தத்துவம், முன்னிலைப் பொருள்களில் எத்தனை தேடினாலும் கிடைக்காது. வீட்டில் நழுவிய காசு வீதியில் தேடினால் வருமா?" என்று உபநிஷக் கோட்பாடுகளுடன் உபதேசித்தார். ராஜமையருக்குக் குபீரென ஞானக் கனல் பற்றியது. பிறகு அழுகைக் கண்ணீர் எல்லாம் விட்டு தியானிக்கத் தொடங்கினார். குரு நாதரை நம்பி ஆத்ம விசாரஞ் செய்தார். கலைவாணரான ராஜமையர், ஞானியானார்.

**பக்குவ மாந்தெய்வ பக்தி பழுத்தாலே**
**தக்க குருவருவார்—மிக்ககலை**
**தேர்ந்தராஜத்திற்குத் தேசிகரா வந்தோர்ந்த**
**நேர்ந்த கதையை நினை.**



பிச்சைக்காரன்:—அம்மா! சாதம் போடுங்கள்!

வீட்டுக்காரி:—இன்னும் சமையல் ஆகவில்லை, போ!

பிச்சைக்காரன்:— அப்படியானால் அடுத்த தெருவைப் பார்த்து விட்டு வருகிறேன்: சமையல் ஜல்தி ஆகட்டும்!

# நர்ஸிங்

## என்றாலே ஆனந்தமிருக்கிறது

இந்தியப் போர் வீரர்களும், மாலுமிகளும், ஆகாய விமானிகளும் உங்களது உதவியைக் கோருகிறார்கள். இதை உங்களது யுத்த சேவையாக ஏற்றுக் கொள்ளுங்கள். நர்ஸாகப் பயிற்சி பெறுங்கள். பின்னர் சமாதான காலத்தில் — உங்கள் வாழ்க்கை முழுதும் ஸ்திரமுடைய — மதிக்க முடியாத பயிற்சியாக இருக்கும். இந்த வேலை மிகவும் ஸ்வாரஸ்யமானது மாத்திரமல்லாமல் பலவகைப் பட்டது. திவ்யமான சந்தர்ப்பங்களையும் உங்களுக்கு அளிக்கிறது. முன் அனுபவம் அவசியமில்லை. வேலையில் சேருமுன் சிறு பயிற்சி அளிக்கப்படுகிறது. ஏற்கனவே நர்ஸ் வேலையில் தேர்ந்தவர்கள் நேரடியாக சேர்ந்து விடலாம். அனுபவமுள்ளவர்களுக்குச் சம்பள உயர்வு அளிக்கப்படும். திருப்திகரமான சேவையின் முடிவில் சன்மானம் வழங்கப்படும். யோக்கியதா பத்திரம் பெற்ற நர்ஸ்கள் ஐ. எம். என். எஸ். நிபந்தனைகளுக்குச் சம்மதமில்லாவிடில் விசேஷ நிபந்தனைபடி ஏ. என். எஸ்.-ல் சேரலாம். மற்ற விவரங்களுக்கு உங்கள் டிவிஷனிலுள்ள லேடி சூப்பரின்டெண்டெண்ட், செயின்ட் ஜான் அம்புலன்ஸ் ப்ரிகேட், ஓவர்ஸீஸ்க்கு எழுதவும். இந்த விலாசத்தை அறிந்து கொள்ள முடியாமல் போனால் டைரக்டர் ஜெனரல், இந்தியன் மெடிகல் சர்வீஸ், நியூ டெல்லி என்ற விலாஸத்திற்கு எழுதுங்கள்.



# ஏ. என். எஸ்.

( ஆக்ஸிலரி நர்ஸிங் சர்வீஸ் )

**இதில் சேர்ந்து இந்தியாவுக்குச் சேவை செய்யுங்கள்.**

AAA 989

# ஏரிக் கரையில்

சாரி

ஒரு நாள் மாலை நண்பர் திருஞானத்திடம் எதை எதை வெல்லாமோ பற்றி சர்ச்சை செய்து கொண்டிருந்தேன். பேச்சுக் கிடையில் அவர் மனிதனுடைய விசித்திரமான குணாதிசயங்களைப் பற்றி வர்ணித்தார். "துக்கப்பட வேண்டியது அவசியம். ஆனால், துக்கமும், தயையும், பச்சாத்தாபமும் யார் பொருட்டு, எந்தெந்த சமயத்தில் இருக்க வேண்டுமோ அப்போதுதான் இருக்க வேண்டும். திருடனுக்கு இரங்குவதும், கீரிப்பிள்ளை பாம்பைக் கடித்துத் துண்டாக்குவதைப் பார்த்துப் பச்சாத்தாபப் படுவதும் தவறான முறையாகும். தயவோ, தாட்சண்யமோ, எதையும் தவறான வழியில் பிரயோகிப்பதுதான் பலருடைய சுபாவமா யிருக்கிறது" என்றார். அதற்குக் கீதையிலிருந்தும், குறளிலிருந்தும் மேற்கோள்களை எடுத்துக் காட்டி ஒரு நீண்ட பிரசங்கமே செய்தார்.



மறு நாள் சாயந்திரம் நானும் அவரும் புழலேரியைப் பார்வையிடச் சென்றிருந்தோம். ஏரியின் கரையில் உட்கார்ந்து விச்ராந்தியாய்ப் பொழுதைப் போக்கினோம். கொஞ்ச தூரத்தில் ஒரு செம்படவன் தூண்டில் போட்டு மீன்களைப் பிடித்துக் கொண்டிருந்தான். அவனுக்கருகே பெரிய நாரை ஒன்று ஆகாரத்துக்காகக் கழுகைப் போல் பார்த்துக் கொண்டிருந்தது.

தூண்டிலில் அகப்பட்ட மீன் ஒன்று துள்ளிப்போய்க் கரையில் விழுந்தது. சமயம் பார்த்துக் கொண்டிருந்த நாரை அதைத் தன்னுடைய அலகால் கொத்தி எடுத்துக் கொண்டு போய்ப் பக்கத்திலிருந்த பாறையின்மீது உட்கார்ந்து விழுங்க ஆரம்பித்தது. மீன் பெரிதா யிருந்ததால் தொண்டையில் சிக்கி நாரை அதை விழுங்க முடியாமல் தத்தளித்தது.

திருஞானத்தைப் பார்த்து, "ஐயோ பாவம்! நாரையைக் காண எனக்கு மிகவும் கஷ்டமா யிருக்கிறது" என்றேன். திருஞானம் மௌனமாக என்னைப் பார்த்துச் சிரித்தார். அவர் சிரிப்பதன் அர்த்தம் புரியாமல், "ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"மனித சுபாவத்தை நினைத்துத்தான் சிரிக்கிறேன். யார் பொருட்டு வருந்த வேண்டுமோ, அதைவிட்டு எதற்காகவோ வருந்துகிறாய்!" என்றார்.

"நாரை ஒரு ஜந்துவல்லவா? அது கஷ்டப்படுவதைக் கண்டு வருந்துவதில் தவறு ஒன்றுமில்லையே?" என்றேன்.

"வாஸ்தவம், தவறு ஒன்றும் இல்லைதான்; ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் உன்னையறியாமல் ஒரு தவறு செய்திருக்கிறாய்" என்றார்.

"எனக்கு ஒன்றும் புரியவில்லையே?" என்றேன்.

திருஞானம் மறுபடியும் சிரித்துவிட்டு, "அதோ, செம்படவன் சுதந்திரமாக வாழும் மீன்களைத் தன்னுடைய வசி போன்ற தூண்டு முள்ளினால், குத்திப் பிடிக்கிறானே, அந்த மீன்கள் அவனுடைய சித்ரவதைக் காளாவதைக் குறித்து நீ வருத்தப் பட்டாயா?" என்று கேட்டார்.

"இல்லை" என்றேன்.

"சரி; அது போகட்டும். நாரையின் தொண்டையில் சிக்கியதால் நாரை கஷ்டப் படுகிறது" என்று வருத்தப்பட்டாயே ஒழிய, அதன் தொண்டைக்குள் சிக்கிய மீனுக்காக நீ சிறிதும் பச்சாத்தாபப் படவில்லையே? தொண்டையில் சிக்கிய மீன் எத்தனை வேதனைக்குள்ளாகி யிருக்கும் என்பதை நீ சிறிதும் சிந்திக்க வில்லையே?" என்றார்.

நான் தவறை உணர்ந்தவனாய் "ஆமாம், ஆமாம்; இதை அறியாமல் போய்விட்டேனே" என்று சொல்லித் திருஞானத்தை ஆச்சரியத்துடன் பார்க்கலானேன்.

"அதுதான் மனித சுபாவம் என்று நான் சொன்னது; எழுந்து வா, வீட்டுக்குப் போகலாம்" என்றார் திருஞானம். ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டவனாய் நான் அவரைப் பின் தொடர்ந்து நடக்கலானேன்.



ஸர். R. K. ஷண்முகம் செட்டியார் முன்னுரை.
கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை வாழ்த்து.
இவற்றுடன்
விசு. திருநாவுக்கரசு எழுதிய

# பண்டிதமணி

(வாழ்க்கைச் சித்திரம்)

விலை ரூ. 1—4—0

முன் பணம் அனுப்புவோருக்கு அஞ்சற் செலவு இல்லை.

தமிழன்னை நிலையம், 4146, கீழராஜவீதி, புதுக்கோட்டை

---

## ஆரணி ஸில்க் ஹவுஸ்

நெ. 4, சன்னதித் தெரு,
மயிலாப்பூர்.



புது தம்பதிகளின் உள்ளங்களை குதூகலிக்கும் ஆடைகள், வனப்பு மிக்க நவீன முறையில் தயாரான பார்டர்கள், தலைப்புகள் அமைந்த ஜவுளி ரகங்கள் திருவல்லிக் கேணியிலிருந்து மாற்றப்பட்டுள்ள ஆரணி ஸில்க் ஹவுஸில் அடுக்கப் பட்டுள்ளன. யாவரும் இன்றே ஒரு முறை விஜயம் செய்யுங்கள்.



**ஆரணி ஸில்க் ஹவுஸ்**
4, சன்னதித் தெரு
மயிலாப்பூர்.

தலைமை ஆபீஸ்: ஆரணி

---

## சைபால்

## CIBOL

(வெளி உபயோகத்திற்கு)

இது படை, சேத்துப் புண், முகப் பரு, வேனல் கட்டி, சொறி சிரங்கு, கரப்பான், பித்த வெடி, முதலிய சகல சர்ம வியாதிகட்கும் சிறந்தது. எரிச்சல் கிடையாது. துணிகளில் கறை பிடிக்காது.

எல்லா கடைகளிலும் கிடைக்கும்



தயாரிப்பவர்கள்:

THE SOUTH INDIAN
MANUFACTURING CO.,
MADURA

---



இனாம்! முற்றிலும் இனாம்!!

ஸ்ரீ மஹாலக்ஷ்மி தேவி அனுக்கிரஹத்தால் "ஆருடத்தின் மஹிமை"

உங்கள் எதிர்காலத்தைப் பற்றி பூரா ஜாதக நகலுடனாவது அல்லது கடிதம் எழுதும் நேரத்துடனாவது 7 கேள்விகள் எழுதி தபால், பூஜை, விளம்பர செலவிற்குமாக அணா 9க்கு தபால் முக்காலணா ஸ்டாம்புகளாக வாங்கி அனுப்பினால் இனமாக உங்கள் எதிர்கால உண்மைச் செய்தி உங்களை விரைவில் தேடி வந்தடையும்.

தசா புக்தி பலன்

எந்த திசையானாலும், எத்தனை வருஷ திசையானாலும் சரி, திசை பூராவிற்கும் புக்தி வாரியாக விபரமாய் பலா பலன் எழுதி அனுப்பப்படும். பூரா ஜாதக நகலுடன் ரூ. 3-8-0 மணியார்டர் அனுப்பினால் மறு தபாலில் பலா பலன் எழுதி அனுப்பப்படும்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஜோதிஷ ஆபீஸ், கோட்டமருதூர்
அரகண்ட நல்லூர். P. O. (S. A. Dt.)

# வண்ணாத்திப் பூச்சி

— அம்பி —



ஒரு ஊரிலே ஒரு ராஜா. அந்த ராஜாவுக்கு ஒரு பெண். அந்தப் பெண்ணின் பெயர் சுகுமாரி. அவள் அழகென்றால் அழகு. அத்தனை அழகு. அவளுக்கு விதம் விதமான பூக்களைத் தலையில் சூட்டிக் கொள்வதில் ஒரு தனி ஆசை.

ஒரு நாள் அரண்மனை வண்ணாத்தியான சிங்காரி, ஒரு விநோதமான பூவைத் தன் தலையில் வைத்துக்கொண்டிருந்தாள். அந்தப் பூ வண்ணாத்திப் பூச்சி மாதிரியே இருந்தது. அதைக் கண்ட ராஜகுமாரி ஆச்சரியத்துடன், "இதென்ன, அதிசயப் பூ! நான் இதுவரை எங்கேயும் பார்க்கவில்லையே? இந்தப் பூ உனக்கு மட்டும் எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டாள்.

"நேற்று ஒரு வயோதிக சந்நியாசி தம்முடைய காவித் துணியைத் தோய்ப்பதற்காக ஆற்றில் இறங்கிக் கொண்டிருந்தார். தண்ணீரில் காலை வைத்ததும் அவருடைய தளர்ந்த உடம்பு, குளிர் தாங்காமல் 'தடதட' வென்று நடுங்க ஆரம்பித்தது. அதைப் பார்த்ததும் எனக்கு அவர் மீது இரக்கம் உண்டாயிற்று. நான் உடனே அவரை நெருங்கி, அந்தத் துணியை வாங்கி வெளுத்துக் கொடுத்தேன். அவர் அந்த உதவிக்கு என்னை மெச்சி, இந்தப் பூவைப் பரிசாகக் கொடுத்தார். இது என்றுமே வாடாதாம்!" என்றாள் சிங்காரி.

அதைக் கேட்ட ராஜகுமாரிக்கு, அந்த அற்புதப் பூவை எப்படியாவது சிங்காரியிடமிருந்து வாங்கிக் கொள்ள வேண்டுமென்றிருந்தது. அவள், தனக்கு அந்தப் பூவின்மீது இருக்கும் ஆசைதானே சிங்காரிக்கும் இருக்கும் என்று கொஞ்சங்கூட நினைத்துப் பார்க்கவில்லை. ராஜகுமாரி கேட்டால் அவள் இல்லை என்று சொல்ல முடியுமா?

சிங்காரிக்கு வருத்தம் தாங்க முடியவில்லை. அவள், "என்னத்துக்கு இந்தப் பூவைத் தலையில் வைத்துக்கொண்டு இங்கே வந்தோம்?" என்று நினைத்தாள். இனிமேல் அவள் என்ன தான் நினைத்து என்ன பிரயோசனம்? ராஜகுமாரியின் கோபத்துக்கு அவள் ஆளாக முடியுமா? ஆகவே, அவள் அந்தப் பூவை வருத்தத்துடன் ராஜகுமாரியின் தலையில் சூட்டப்போனாள். ஆனால், அதற்குள் அந்தப் பூ வண்ணாத்திப் பூச்சியாக மாறிப் பறக்க ஆரம்பித்துவிட்டது!

அதைப் பார்த்த சிங்காரிக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. அவளையும் அறியாமல் அவள் 'களுக்' கென்று சிரித்து விட்டாள். ராஜகுமாரிக்கு எப்படியிருக்கும்? அவள், வண்ணாத்தியையும் வண்ணாத்திப் பூச்சியையும் எரித்து விடுபவள் போல் பார்த்தாள். அவளைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் அந்த வண்ணாத்திப் பூச்சி, ரீங்காரம் செய்து கொண்டே சிங்காரியின் தலையைச் சுற்றிச் சுற்றி வலம் வந்து கொண்டிருந்தது!

அரசகுமாரியின் ஆசை நிராசையாய்ப் போய்விடவே, அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. அந்த ஆத்திரத்தில், தனக்கு என்ன தண்டனை கிடைக்குமோ என்று சிங்காரி பயந்தே போய் விட்டாள்.

அப்பொழுது அவள் பயத்தைத் அதிகரிக்கும் படியாக இன்னொரு அதிசயம் நடந்தது. அந்த வண்ணாத்திப் பூச்சி மீண்டும் சிங்காரியின் தலையில் அமர்ந்து அவள் ஜடையை அலங்கரித்தது!



ராஜகுமாரி கண்களில் தீப்பொறி பறக்க, மீண்டும் அந்தப் பூவை எடுக்கப் போனாள். என்ன ஆச்சரியம்! அந்தப் பூ மறுபடியும் அவளை ஏமாற்றி விட்டு, வான வீதியை நோக்கிப் பறந்தது!

ஏமாற்றத்துக்கு மேல் ஏமாற்றம்! ராஜகுமாரி அசைவற்று நின்றாள். சிங்காரிக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. "அந்த சந்நியாசி நமக்கு ஏன் இந்தப் பூவைக் கொடுத்தார்!" என்று நினைத்து அவள் வருந்தினாள். பயத்தினால் அவள் உடம்பு நடுங்க ஆரம்பித்து விட்டது. வேறு வழியில்லாமல் அவள் ராஜகுமாரியின் காலில் விழுந்து, தன்னை மன்னிக்கும்படி வேண்டிக் கொண்டாள்.

ராஜகுமாரி அவளை மன்னிக்கவில்லை. அதற்குப் பதிலாக அவள், "மாயக்காரி, உனக்கு மன்னிப்பா வேண்டும், மன்னிப்பு!" என்று உறுமினாள்.

அப்பொழுது நல்ல வேளையாக, அந்த அற்புதப் பூவைக் கொடுத்த சந்நியாசி அங்கே தோன்றினார்!

அவரைக் கண்டதும் சிங்காரி கை கூப்பி வணங்கி, "சுவாமி! எனக்கு அன்புடன் அளித்த அந்த அற்புதப் பூ, அரசகுமாரியின் மனதைப் பெரிதும் வேதனைக்குள்ளாக்கி விட்டது! அந்தப் பூவை நான் அரசகுமாரியின் தலையில் சூட்டப் போனேன். ஆனால், அதற்குள் அது வண்ணாத்திப் பூச்சியாக மாறிப் பறந்து விட்டது. இந்த அடிமைக்கு அந்தப் பூ ஏன் சுவாமி! தயவு செய்து அதை அரசகுமாரியின் தலையிலேயே சூட்டி விடுங்கள்!" என்று வேண்டிக் கொண்டாள்.

"ஆசை அரசகுமாரிக்கு மட்டுந்தானா? அடிமைக்கு இல்லையா?" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே, "சுகுமாரி! நீ ராஜகுமாரியாயிருப்பதால் 'நினைத்ததெல்லாம் நடக்கும்' என்று எண்ணிக் கொண்டாயா? உனக்கு இருக்கும் ஆசை தானே இன்னொருவருக்கும் இருக்கும்? கடவுளுக்கு வித்தியாசமே கிடையாது!" என்றார் சந்நியாசி.

"இப்பொழுதே பார், இந்தச் சிங்காரியை என்ன செய்யச் சொல்கிறேன்!" என்று சொல்லி விட்டு அந்தக் கர்வம் பிடித்த ராஜகுமாரி தன் அருகிலிருந்த ராஜாவைப் பார்த்து, "அப்பா!" என்று கோபமாக ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.



அதற்குள் சந்நியாசி, "அவளை ராஜ தண்டனை ஒன்றும் செய்ய முடியாது!" என்று சொல்லி, அவள் தலைக்கு மேல் தமது கரத்தை நீட்டினார். உடனே சிங்காரி வண்ணாத்திப் பூச்சியாக மாறி விட்டாள்! அவளுடன் வண்ணாத்திப் பூச்சியாக மாறிய அந்த அதிசயப் பூவும் சேர்ந்து கொண்டது.

இரண்டு வண்ணாத்திப் பூச்சிகளும் சேர்ந்து கொண்டு, வான வீதியை நோக்கி உல்லாசமாகப் பறந்தன.

சந்நியாசி ராஜகுமாரியைப் பார்த்து ஏளனமாகச் சிரித்துக் கொண்டே மறைந்து விட்டார்!



"குழந்தைக்கு நாலு நாள் சேர்ந்து மருந்து கொடுத்தார். அதை இரண்டே நாளில் தீர்த்து விட்டீர்களே!"

"என்ன செய்யட்டும், டாக்டர் ஸார்? ஒவ்வொரு வேளையும் குழந்தைக்கு மருந்து கொடுப்பதற்கு முன்னால் நானும் என் மனைவியும் அதைச் சாப்பிட்டுக் காட்ட வேண்டியிருக்கிறது!"

# நாங்கள் நாலு பேர்

மீனாக்ஷி ஸீதாராமன்



"இதற்குள்ளே வண்டி வந்தாயிருக்குமே காமு! ஆரத்தி கரைத்து வையம்மா" என்று தாழ்வாரத்தில், அவர் பேத்தி ஹேமாவுக்குப் பின்னிக் கொண்டே கத்தினார் என் மாமியார்.

"எல்லாம் தயார்!" என்று ஒரு கீச்சுக் குரல் அடுப்பங் கரையிலிருந்து பதிலளித்தது. அது என் இரண்டாவது ஓர்ப்படியான காமு மன்னியின் குரல். அவள் பதிலளித்ததும், வாசலில் எங்கள் குதிரைவண்டி வந்து நின்றது. கையில் சீப்புடன் மாமியார், பாதிப் பின்னல் பின்னிக் கொண்ட ஹேமா, நாங்கள் நாலு ஓர்ப்படிகள், இன்னும் சிறுசுகள் ஒன்றேகால் டஜன், எல்லாரும் வாசற் கதவண்டை ஓடினோம்.

வண்டியிலிருந்து எங்கள் மாமனார் முதலில் இறங்கினார். "மெள்ள அம்மா, குழந்தாய்!" என்று அவர் பார்த்துச் சொன்ன இளம்பெண் அடுத்தாற் போல் இறங்கினாள். அவளை நிழல் போல் தொடர்ந்து வந்தார், என் கொழுந்தன் சீனு.

"ஆரத்தி! ஆரத்தி! ஹும், சீக்கிரம்!" என்று எங்கள் மாமனார் அவசரப் படுத்தவே, நாங்கள் நால்வரும் உள்ளே ஓடினோம். ஒரு காரியத்திற்கு ஒருவரே போதுமானாலும், நாங்கள் நாலு ஓர்ப்படிகளும் ஓடுவது எப்பொழுதும் எங்கள் வழக்கம்.

ஆரத்தி எடுத்ததும், உள்ளே நுழைந்தாள் புது நாட்டுப்பெண் லலிதா! இவளைப் பார்க்கத்தான் ராஜம் மன்னியும் காமு மன்னியும் அடியாய் அடித்துக் கொண்டிருந்தார்கள்! எங்கள் புக்ககத்தில் எந்த விசேஷம் நடந்தாலும், எங்கள் மூத்த இரண்டு மன்னிகளும் பார்க்கக் கொடுத்து வைப்பதில்லை. அவர்கள் பிரசவத்திற்குப் பிறந்தகம் போய்விடுவது வழக்கம். ஆகவே, அவர்கள் லலிதாவின் கல்யாணத்தின் போது இல்லை. மேலே குறிப்பிட்ட ஒன்றேகால் டஜன் சிறுசுகளில் ஆறு, ஆறு அவர்களிருவருடையதே! அதில், ஒருகுறும்புக்காரப் பையன், "என்ன விஷமம் பண்ணலாம்?" என்று யோசித்துக் கொண்டிருக்கிறானே, அவனைப் பெற்றவள் நான்தான். இன்னும் இரண்டு என் மூன்றாவது ஓர்ப்படி கங்கை பெற்றெடுத்தவை. இப்படிக் குடும்பம் இருக்கும்போது தினந்தோறும் எங்கள் மாமனார், மாமியார் தலைவலி பொறுக்காமல் படுத்துக் கொள்வதில் என்ன ஆச்சரியம்?

என் கல்யாணத்தின்போது தெரியாத்தனமாக, என் அக்காளின் பேத்தி, என் ஓர்ப்படிகளை, "ஓமப்பொடிகள்!" என்று அழைத்து விட்டது! அதற்காக அவர்கள் எச்சில் கையுடன், சாப்பாட்டுப் பந்தியிலிருந்து எழுந்து போனார்கள்! இந்த ஓர்ப்படிகளில், இரண்டு வயதுக் குழந்தையின் மழலைச் சொற்களைக் கேட்டு, மகிழாதவர்களும் உண்டு போலிருக்கு!

★

ராஜம்தான் முதல் ஓர்ப்படி. இந்த உலகத்திலேயே அவள்தான் பெரியவள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாள். ஆகவே, அவள் எங்கள் மூன்று பேர்களையும். "நண்டு, நொசுக்கு, சிறிசு!" என்றெல்லாம் கூப்பிடுவாள்.

நான் புக்ககம் வந்த புதிதில், எதிர் வீட்டு மூத்துப் பாட்டி அவசரம் அவசரமாக ஒரு நாள் உள்ளே ஓடி வந்தாள். வந்ததும், என்னை ஒரு பார்வை பார்த்து விட்டு, "ஏண்டி ராஜம்! சொன்னதைச் சரியாகச் சொல்லப்படாதோ? சுந்தரி குட்டைக்கை ரவிக்கை போட்டுக் கொண்டிருப்பதாகச் சொன்னாயே! ஒன்றையும் காணோமே! நன்னாயிருக்கு, போ! அந்த ரவிக்கையைப் பார்க்கக் கிழவருக்கு மோர் கூட வார்க்காமல் வந்தேன்!" என்று மூச்சுத் திணறிக் கத்திவிட்டுப் போனாள்.

அப்பொழுது கங்கை, "ஆமாம், காலையில் என்னிடம் வந்து, 'குழந்தைக்குப் பாதி எண்ணெய் தேய்த்திருக்கேண்டி. எதிர் வீட்டு மூத்துப் பாட்டி

யிடம் கொஞ்சம் வேலையிருக்கு, போய் விட்டு வரேன்!' என்று சொல்லி விட்டுப் போனான் ராஜம் மன்னி! அவன் தான் உன் குட்டைக் கை ரவிக்கையைப் பற்றி மூத்துப் பாட்டியிடம் சொல்லி யிருக்க வேண்டும். அதைப் பார்த்து விட்டுப் போகத்தான் அந்தப் பாட்டி அத்தனை அவசரமாக வந்துவிட்டுப் போனான்! நல்ல வேளை! மூத்துப் பாட்டி வருவதற்கு முன் குளிப்பதற்காக அந்த ரவிக்கையைக் கழற்றி விட்டாயே!" என்றான்.

அன்று நான் இரண்டங்குலம் கை வைத்த ரவிக்கைக்குப் பதில், ஒரு அங்குலக் கை வைத்த ரவிக்கை போட்டுக் கொண்டிருந்ததுதான் இத்தனை அமர்க்களத்திற்குக் காரணம். பார்த்தீர்களா! எங்கள் முதல் ஓர்ப்படி ராஜம் மன்னியை! ஏதோ, 'வயர்லெஸ்ஸாம்' மன்னனுக் கட்டியாம்! இதுகளைக் கண்டு பிடித்ததற்காகப் பிரபாதப் படுத்திக் கொண்டிருக்கிறார்கள் வெள்ளைக்காரர்கள்!

"சாப்பிடும்போது யாராவது, இன்று குழம்பில் ஒரே உப்பு, ரஸத்துக்கு ரொம்பத் தாளித்து விட்டீர்கள்" என்றால், உடனே மாமனார், மாமியாருக்குக் கேட்கும்படி, "ஏண்டி கங்கா! கஸ்தூரி! நான் உப்புப் போட்ட பிறகு, நீங்களும் போட்டேளா? ரஸத்தை இரண்டாந் தரம் தாளித்து விட்டீர்களோ, என்னமோ" என்பாள் ராஜம். காரியமெல்லாம் எப்பொழுதும் எங்கள் ராஜம் மன்னியுடையதுதான். நாங்கள் அவள் கேள்விகளுக்கு மௌனம் சாதிப்போம். "இல்லை" என்று சொன்னேனோ, "செய்து விட்டு மறந்து போயிருப்பீர்கள்! சிறிசோல்லோ, நன்றோல்லோ!" என்று ஆரம்பித்து விடுவாள். இந்த வெட்கக் கேட்டுக்கு நாங்கள் என்னத்தைச் சொல்வது?

என்னை முழுக் கர்நாடகமாக்கியவள் ராஜம் மன்னிதான். என் நடை, உடைகளைப் பற்றி அக்கம் பக்கத்தில் சொல்லிச் சொல்லி, என்னைப் பார்க்க அவர்களை யெல்லாம் எங்கள் வீட்டுக்கு வரவழைத்து, என்னை ஒரே பட்டிக் காட்டுப் பெண்ணாக மாற்றிவிட்டாள்! அப்பொழுது என் அகத்துக்காரர் இருந்தாலும் அதைப் பற்றி ஏதாவது கேட்டு வைப்பார். அவர் பிஹாரவில் ஐ. எம். எஸ். ஸாக இருக்கிறார்.

★

அசல் ஓர்ப்படி என்றால், அவள் எங்கள் காமு மன்னிதான். கடுகளவு கர்வம், நெல்லிக்காயளவு பொறாமை மிளகளவு கோபம், இன்னும் சில வேண்டாத குணங்களெல்லாம் அவளிடம் உண்டு. என் பிள்ளை விஜயன் எப்பொழுதாவது அவள் குழந்தைகளைக் கொஞ்சம் சீண்டுவான். அதற்கு, என் மேல் பாணம் தொடுப்பாள் காமு மன்னி. என் பிள்ளைமேல் கோபித்துக் கொண்டு, தன் குழந்தைகளை அடிப்பாள். விஜயன் 'மிலிடரி ஸல்யூட்' பண்ணிக் காண்பித்தால், "உங்கள் அப்பா சண்டை முடியும் வரையில்தான் பெரிய ஆசாமி; அப்புறம் திண்டாட வேண்டியதுதான்!" என்பாள். அதற்கு விஜயன், "அம்மா! என்ன ஆனாலும், நம்ப அப்பா வக்கீல் 'தலைப்பா' வைத்துக் கொள்ள மாட்டாரோ, இல்லையோ!" என்று சொல்லிச் சிரிப்பான். அப்பொழுது அவனை வாரி முத்தமிடுவதா, அல்லது கண்டிப்பதா வென்று எனக்குத் தெரியாது.

காமு மன்னிக்குச் சிறு பிள்ளைகளுடன் சிரித்து விளையாடுவதிலும், அவர்கள் வாயைப் பிடுங்குவதிலும், ஒரு தனிப் பிரேமை. இந்த விஷயத்தில் ராஜம் மன்னிக்கும் அவளுக்கும் அடிக்கடி மனஸ்தாபம் வந்துவிடும். "என்ன இருந்தாலும், அடக்க ஒடுக்கமாக இருக்க வேண்டாமோ, பெண்டுகள்! ஆறு குழந்தைகளைப் பெற்று விட்டு, சின்னப் பசங்களுடன் என்ன விளையாட்டு வேண்டியிருக்கு? நாலு பேர் பார்த்தால், என்ன சொல்வார்கள்?" என்பாள் ராஜம் மன்னி. ஆனால், நாலு பேர் என்ன கண்டிருக்கு? ராஜம் மன்னியே இந்த நாலு பேர்களுக்குத் தகவல் கொடுத்து விடுவாளே!

★

"கங்கா எப்படி?" என்கிறீர்களா? அவளுக்கு அந்தப் பெயர் ரொம்ப ரொம்பப் பொருத்தம். ஏனெனில், யார் என்ன சொன்னாலும், கலகல வென்று கண்ணீர்விட ஆரம்பித்து விடுவாள். மாமனார் மாமியாரிடம் இருக்கும் பயத்தைவிட, அவளுக்குப் பெரிய இரண்டு ஓர்ப்படிகளிடம் ஒரே பயம்.

★

"எல்லாம் சரி, நீ........." என்று கேட்பது என் காதில் விழாமலில்லை. நானா? என்னைக் கேட்டால், நான் நல்லவள்தான்! இதை நீங்கள் ஒப்புக் கொள்ள வில்லையென்றால், என்னைப் பற்றி ராஜம் மன்னியைக் கேளுங்கள்!




"பிராட்வே டிக்கெட்ஸ்!" என்று கண்டக்டர் கத்தியதும் நான் பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கினேன். அந்தச் சமயம் என்னை இடித்துத் தள்ளிக்கொண்டு ஒருவன் போனான். நானும் பதிலுக்கு அவனை இடித்தேன். இரண்டு பேரும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டோம்.

"என்னடா, ஜானகிராமா! அடையாளமே தெரியவில்லையே!" இப்போது நீ என்ன செய்கிறாய்?

"இப்பொழுது ஜவுளி வியாபாரத்தில் இறங்கி விட்டேன். இதோ பக்கத்தில் தான் கடை" என்று தன் கடைக்கு அழைத்துக் கொண்டு போனான்.

கடையின் வாசலில் 'ஜானகிராம் ஜவுளிக் கடை' என்று ஒரு போர்டு மூலையில் பரிதாபமாகத் தொங்கியது. புடவைகளும் வேஷ்டிகளும் ஒழுங்கில்லாமல் வைக்கப்பட்டிருந்தன.

"என்ன ஜானகிராமா, வியாபார தந்திரமே உனக்குத் தெரியவில்லையே! எதற்கும் படாடோபம் வேண்டும், அப்பா! புடவைகளை யெல்லாம் ஒழுங்காய் அடுக்கிவை. 'ஜானகிராம் ஜவுளிக் கடை' என்னும் பெயர் சகிக்கவில்லை. ஸ்திரீகளின் பெயரை வைத்தால்தான் ஜவுளிக் கடைக்கு ஒரு 'மவுஸ்' ஏற்படும். 'ஜானகி ஸில்க் எம்போரியம்' என்று புதிதாக ஒரு போர்டு எழுதி மாட்டு. வருபவர்களை விசாரிக்க இன்னும் பையன்களைப் போடு" என்றேன்.

"இதற்குப் பணம் அதிகம் செலவாகுமே!" என்றான்.

"ஒரு வழி சொல்கிறேன் கேள். அதோ அந்தப் புடவைக்குப் பதினைந்து ரூபாய் போட்டிருக்கிறாய். அது தப்பு. 'அசல் விலை ரூபாய் 50. இன்று ஸ்பெஷல் விற்பனை விலை ரூபாய் 25' என்று எழுதிவை. இதெல்லாம் வியாபார தந்திரம். நீ செலவழிக்கும் பணத்துக்கு மேல் மூன்று மடங்கு வருகிறதா, இல்லையா பார்" என்றேன்.

மறுநாள் மாலை ஜானகிராமன் கடைக்குச் சென்றேன். நான் சொல்லிக் கொடுத்ததற்குமேல் நன்றாகச் செய்திருந்தான். கடையில் கூட்டம் நெரித்தது. என்னைக் கண்ட ஜானகிராமன் சந்தோஷத்துடன் வரவேற்று, "நல்ல யுக்தி சொன்னாய். வா, இன்று நாம் இருவரும் ஸினிமாவுக்குப் போகலாம்" என்றான். நானும் சம்மதித்தேன்.

படம் முடிந்ததும் நேரே நான் வீட்டுக்கு வந்து விட்டேன். சாப்பாடு ஆனதும் என் அறையில் வந்து உட்கார்ந்தேன். நான் எழு மணிக்கு வந்தால்கூட நாழிகையாகி விட்டது என்று முணு முணுக்கிற என் மனைவி ஒன்பதரை மணிக்கு வந்து என்னைப் பார்த்து ஒரு வார்த்தை கூடச் சொல்லாதது எனக்கு ஆச்சரியத்துடன் திகிலையும் தந்தது. என் மனைவியின் உற்சாகம் என் மணி பர்ஸைப் பாதிக்குமோ என்ற திகில்தான் அது.



ஸ்பெயினில் இருக்கும் ஸர் சாமுவேல் ஹோர் ஒரு நாள் தம் மோட்டார் வண்டியில் ஏறப் போனார். அப்பொழுது வண்டியின் நாலு சக்கரங்களிலும் காற்று பிடுங்கி விடப்பட்டிருந்தது. பக்கத்தில் பின் கண்ட கடிதம் கிடந்தது; "பெட்ரோல் பிரிட்டிஷ் பெட்ரோலாய் இருக்கலாம். ஆனால் காற்று எங்கள் நாட்டின் காற்று."

"என் அண்ணா கல்யாணத்துக்குக் கட்டிக்கொண்டு போக ஒரு புடவை வாங்கச் சொல்ல வேண்டும் என்று இருந்தேன். நீங்கள் ஆபீஸுக்கு அவசரமாய்ப் போய் விட்டீர்கள். ஆகையினால் நானே ஒரு புடவை வாங்கி வந்தேன். பாருங்கள்! இது நன்றாயிருக்கிறதா?" என்று ஒரு புடவையை என்னிடம் காட்டினாள்.

"எங்கே வாங்கினாய்? என்ன விலை?"

"கொஞ்சம் நிதானியுங்கோ; ஒன்றும் கண்ணை மூடிக்கொண்டு போய்ப் பணத்தைக் கொட்டிவிடவில்லை. ஷாப்பு ஷாப்பாய்ப் பார்த்துத்தான் வாங்கினேன். புதிசாய் ஜப்பான் பஜாரில் ஒரு கடை வந்திருக்கிறது. விலையெல்லாம் பாதியாகக் குறைத்திருக்கிறான். இந்தப் புடவையின் அசல் விலை ஐம்பது ரூபாயாம். இருபத்தைந்து ரூபாய்க்கு வாங்கினேன். நீங்கள் பால்காரனுக்குக் கொடுக்கச் சொன்ன பணத்தில் தான் வாங்கினேன். என்மேல் கோபமா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டாள்.

நான் பதில் பேச என்ன இருக்கிறது?

"அடபாவி, கற்ற வித்தையைக் குருவிடமே காட்டுவது போலவும், தீட்டிய மரத்தில் கூர்மை பார்ப்பது போலவும், நான் சொல்லிக் கொடுத்ததைக் கொண்டு என்னையே மோசம் செய்து விட்டாயே!" என்று எழுத்தாளன் என்ற தோரணையில் உபமானங்களுடன் ஞானசோமனை நன்றாய்த் திட்டினேன்.



# நடுத் தெருச் சண்டை

**வம்பன்**



**ப**ணத்தில் மிதந்து கொண்டிருக்கும் அமெரிக்காவிலிருந்து அன்று தான் ஒரு ஸோல்ஜர் சென்னை ஹார்பரில் வந்து இறங்கினான். ஹார்பரை விட்டு அவன் வெளியே வந்ததுதான் தாமதம், பூவை வண்டுகள் மொய்ப்பது போல் ரிக்ஷா வண்டிக்காரர்கள் அவனைச் சூழ்ந்துகொண்டு விட்டனர். எந்த ரிக்ஷா வண்டியில் ஏறுவது என்று அமெரிக்க ஸோல்ஜர் ஒரு கணம் திகைத்துக் கடைசியில் ஒரு புதிய ரிக்ஷாவாகப் பார்த்து ஏறினான்.

வண்டி அமெரிக்கன் குறிப்பிட்ட இடத்தை அடைந்தது. அந்த ஸோல்ஜர் ரிக்ஷாவைப் பார்த்ததே கிடையாது. வண்டியை விட்டு இறங்கியதும் அவன் அதை நான்கு பிரதட்சணம் வந்தான். கடைசியில் ரிக்ஷாக்காரனுக்கு வாடகை கொடுப்பதற்காகத் தன் பையிலிருந்து ஐம்பது ரூபாயை எடுத்துக் கொடுத்தான்.

அதைக் கண்டதும் ரிக்ஷாக்காரனுக்கு ஏற்பட்ட கோபத்தைச் சொல்லி முடியாது. அந்த அமெரிக்க ஸோல்ஜருக்குப் புரியாத தமிழ்ப் பாஷையில் என்னென்னமோ சொன்னான்.

ஸோல்ஜருக்கு ஒன்றும் புரியவில்லை. இன்னும் ஐம்பது ரூபாயை ரிக்ஷாக்காரனிடம் கொடுத்தான். அப்போதும் ரிக்ஷாக்காரன் சமாதானமடையவில்லை. அதற்குள் பெருங் கூட்டம் கூடி விட்டது.

கூட்டத்தில் இருந்த ஆங்கிலம் தெரிந்த ஒருவர் ஸோல்ஜரை விசாரித்தார். அவன் "வாடகை நூறு ரூபாய் கொடுத்தும் போதாது என்கிறான் ரிக்ஷாக்காரன்" என்றான். ரிக்ஷாக்காரனை விசாரித்ததற்கு, "என்ன சாமி! நான் ரூபாய் 150-க்கு வாங்கின ரிக்ஷாவை ரூபாய் 100-க்குத் தட்டிக் கொண்டு போகப் பார்க்கிறானே, நியாயமா! என்றான்.



"நான் ரேடியோ வாங்கியதனால் என் மூத்த பெண் ஆர்மோனியம் வாசிக்கக் கற்றுக் கொண்டு விட்டாள். இரண்டாவது பெண் பிடில் வாசிக்கிறாள். என் மனைவியோ ராகத்துடன் பாடுகிறாள்."

"நீர் என்ன கற்றுக் கொண்டீர்?"

"நான் இதை யெல்லாம் சகிக்கக் கற்றுக் கொண்டு விட்டேன்!"



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 78. லாபந்தான் காடு சென்றதும்

ராமன் படுத்திருந்த இடத்தைப் பார்த்தாய் விட்டது; லக்ஷ்மணன் ஒரே விழிப்பாய்க் காத்து நின்ற இடத்தையும் பார்த்தாய் விட்டது. துன்பக் கடலுக்குள் மூழ்கிப் போன பரதனுக்கு உணர்ச்சி வந்தது. கங்கையைக் கடக்க வேண்டியதுதானே!

தோணிகள் எல்லாம் வந்து விட்டன. சேனையும் மற்ற அயோத்தி மக்களும் படகுகளில் ஏறிப் போய் விட்டார்கள். ஒரு படகில் பரதனும் ஏறினான். தன்னுடன் தம்பி, தாய்மார் முதலானவர்களையும் ஏறச் செய்கிறான். சுமந்திரன் முதலிய மந்திரிகள் உறவினர்கள் முனிவர்கள் என்று இந்த விதமாகச் சிலரும் ஏறிக் கொள்ளுகிறார்கள். குகனும் ஏறிக் கொள்ளுகிறான்.

யானை என்ன, குதிரை என்ன, பல்லக்கு என்ன — எல்லாம் உடன் வந்தாலும் பரதன் நடந்துதான் வந்தான். அவனுடைய கால்கள் எவ்வளவு நொந்து போயிருக்கும்! அந்தக் கால்கள் கவிஞரது கண்ணை விட்டு அகலமாட்டேன் என்கின்றன. படகு நகருவதற்காகத் துடுப்புகள் தண்ணீருக்குள் இறங்கித் தள்ளுகின்றன. துடுப்பு துடுப்பாகப் படவில்லை — கவிஞரது கண்களுக்கு.

தன்னனை தம்பியும்
　　தாயர் மூவரும்
சொன்னதேர் வலவனும்
　　தூய தோழனும்
துன்னினர் ஏறினும்
　　துழாது டுப்பெனும்
நல்நயக் கவினுால்
　　நடத்தல் மேயினான்.

[தேர் வலவன்: சுமந்திரன்: தூய தோழன்: குகன்: துன்னினர் ஏறினும்: நெருக்கிக் கொண்டு படகில் ஏறவும்: துழா துடுப்பு எனும்: தண்ணீர்க் துழாவுகின்ற துடுப்பாகிய; நல்நயக் கவினுால்: அருமையான கால்களினால்; நடத்தல் மேயினான்: நடந்தான். — இன்னமும் பரதன் நடந்தது போலே கவியின் கண்ணுக்குத் தோன்றுகிறது.]

படகு கங்கையில் மெள்ளச் சென்று கொண்டிருக்கிறது. படகு விசாலமானது. உறவினர்கள் முனிவர்கள் முதலான பெரியோர்களும் கோசலா தேவியைத் தொழுது நிற்கிறார்கள். குகனும் தொழுத நிலையிலேயே 'அந்தத் தேவி யாரோ?' என்று பரதனைப் பார்த்துக் கேட்கிறான்.

[வேறு சந்தம்]

சுற்றத்தார் தேவரொடும்
　　தொழநின்ற கோசலையைத்
　　　　தொழுதுநோக் கி,
'வெற்றித்தார்க் குரிசில்! இவர்
　　யார்' என்று குகன்வினவ,—
　　　　வேந்தர்வை கும்
முற்றத்தான் முதல்தேவி.
　　மூன்றுலகும் ஈன்றானை
　　　　முன்ஈன்று னைப்
பெற்றத்தால் பெருஞ்செல்வம்
　　யான்பிறத்த லால்துறந்த
　　　　பெரியாள்' என் றான்.

[வெற்றித்தார் குரிசில்: போரில் பகைவரை வென்று வெற்றி மாலையை அணியத் தகுந்த பரதனே; வேந்தர் வைகும் முற்றத்

சீரன் முதல்த் தேவி: தசரதனைப் பேட்டி காணச் சமயம் கிடைக்காமல் அரசர்கள் பல நாளாகக் காத்து முற்றத்தில் தங்குவார்கள்; —அப்படி அரசர் தங்கும் முற்றத்துக்குரிய சக்கரவர்த்தியின் முதல் மனைவி—பட்டமகிஷி; மூன்றுலகும் ஈன்றானை: பூமியென்றும், வான் என்றும், பாதாளம் என்றும் மூன்று உலகங்களைப் படைத்த பிரமனை: முன் ஈன்றானை: ஆதியில் உண்டாக்கிய விஷ்ணு மூர்த்தியின் அவதாரமான இராமனை: பெற்றதாய் பெருஞ் செல்வம்: பெற்றதாலாகிய பெரும் பாக்கியத்தை: துறந்த: இழந்த. குறிப்பு: இராமனைப் பெற்றெடுக்கும் பாக்கியம் சாமானியம் அல்ல என்பதைப் 'பெற்றதாய்' என்றதிலுள்ள வல்லோசை காட்டுகிறது.]

ராமனைப் பெற்ற தாய் என்று சொன்னதும், குகன் அப்படியே அவள் பாதத்தில் விழுந்து அழத் தொடங்கினான். கோசலை பார்த்து, "இவன் யார் அப்பா?" என்று கேட்கிறாள்:

என்றலுமே, அடியின்மிசை
நெடிதுவீழ்ந்(து) அழுவானை,
இவன்யார்என் று
கன்றுபிரி காராவின்
துயருடைய கொடிவினவக்
கழல்க்கால்மைந் தன்,
'இன்துணைவன் இராகவனுக்(கு)
இலக்குவற்கும் இளையவற்கும்
எனக்கும்மூத் தான்,
குன்(று)அனைய திருநெடுந்தோள்க்
குகன்என்பான் இந்நின்ற
குரிசில்'என் றான்.

[கன்று பிரி காராவின் துயருடைய கொடி வினவ: கன்றை விட்டுப் பிரிந்த கறவைப் பசுப் போல் ராமனை விட்டுப் பிரிந்திருக்கிற கோசலா தேவி கேட்க; கழல்க்கால் மைந்தன்: பரதன்: இன் துணைவன் இராகவனுக்கு: ராமனுக்குச் சிநேகிதன்: இளையவற்கும்: சத்ருக்னனுக்கும்: குகன் என்பான் இந்நின்ற குரிசில்: குகன் என்னும் பெயர் கொண்ட இதோ நிற்கிற வீரன்—மூத்தான்.]

குகன் அழவும், பரதனுக்கும் சத்ருக்கனுக்கும் கண் கலங்கி விட்டது. மூவரையும் பார்த்து, கோசலை, பேசுகிறாள்:

'நைவீர் அலீர், மைந்தீர்!
இனித்துயரால்; நா(டு)இறந்து
காடுநோக் கி
மெய்வீரர் பெயர்ந்ததுவும்
நலமாயிற் றும்அன்றே!
விலங்கல்த்திண் தோள்க்
கைவீரக் களி(று) அனையக்
காளைஇவன் தன்னோடும்
கலந்து. நீ வீர்
ஐவீரும் ஒருவீராய்
அகலிடத்தை நெடுங்காலம்
அளித்திர்'என் றாள்.

[நைவீர் அலீர் மைந்தீர் இனித் துயரால்: என் அருமைப் பிள்ளைகளே, துயரத்தினால் நீங்கள் ஏன் வருந்த வேண்டும்? வருந்த வேண்டாம்: நாடு இறந்து காடு நோக்கி: நாட்டை விட்டுக் காட்டைப் பார்த்து: மெய் வீரர் பெயர்ந்ததுவும் நலமாயிற்றும் அன்றே: ராம லக்ஷ்மணன் போனதுவும் லாபத்தையல்லவா கொடுத்திருக்கிறது: விலங்கல்த் திண்தோள்: மலைபோன்ற வலிய தோள் கொண்ட; கைவீரக் களிறனைய காளை இவன் தன்னோடும்: துதிக்கை கொண்ட யானையை ஒத்த வீரனான இந்தக் குகனோடும்: அகலிடத்தை நெடுங்காலம் அளித்திர்: இந்தப் பரந்த ராஜ்யத்தை ஆள்வீர்களாக.]

நைவீர் அலீர் என்று ஆறுதல் சொல்ல ஆரம்பித்தாள் கோசலை. அவளுக்கே உண்மையான ஆறுதல். குகனையும் அவனது அரிய அன்பையும் பார்த்த காரணத்தால் ஆறுதல். அந்த ஆறுதலானது செய்யுளின் ஓசையிலேயே தொனித்துக் கொண்டு வருகிறது. 'ஐவீரும் ஒருவராய்' என்று இவர்களையும் அணைத்துச் சொல்லும்போது ஆறுதல் [illegible] அபூர்வமான முறையில் கனிந்து விடுகிறது. சம்பிரதாய இலக்கணம் மெள்ள ஒதுங்கி விடுகிறது.



பிரயாணி:—ஐயயோ! இரண்டு மணி வண்டி போய்விட்டதே, என்ன பண்ணுவேன்!
போர்ட்டர்:—கவலைப்படாதீங்க. இன்னிக்கு ஒரு மணி வண்டி லேட்டுங்க. இனிமேத் தான் வரப்போறது: அதிலே போங்க.

# வர வர மாமியார்—

பகீரதன்

"நான் என்ன செய்து வைத்தாலும் அவருக்குப் பிடிக்கிறதே இல்லை. என்னைப் பார்க்கும் போதே கடுகடுப்பாகப் பார்க்கிறார். நான் எதையாவது கேட்டாலும் பதிலே சொல்லுவதில்லை. இத்தனைக்கும் நான் அவர் மனங் கோணப்படாது என்று எவ்வளவோ ஜாக்கிரதையாகத்தான் நடந்து கொள்கிறேன். என்ன செய்வது அம்மா!" என்று பக்கத்து வீட்டுத் தங்கம்மாவிடம் தன் குறையைச் சொல்லிக் கொண்டிருந்தாள் அஞ்சுகம். அவள் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது.

அஞ்சுகத்தின் முகத்தில் சுருண்டு கிடந்த தலைமயிரைக் கோதி விட்டுக் கொண்டே "என்ன அம்மா செய்வது? எல்லாம் போகப் போகச் சரியாகப் போய் விடும்" என்று அன்போடு ஆறுதல் வார்த்தைகள் சொன்னாள் தங்கம்.

இதனாலெல்லாம் அஞ்சுகத்தின் மனம் தேறுவதாயில்லை; தேம்பித் தேம்பி அழுதுகொண்டே இருந்தாள். உலகந் தெரியாத அஞ்சுகத்தின் ஆழங்காண முடியாத துயரத்தை ஆற்றமுடியாமல் தங்கம் மௌனமாகவே இருந்தாள்.

"டிங் டாங்" என்ற சைக்கிளின் மணிச் சத்தம் கேட்டதும் "அவர் வந்து விட்டாரம்மா, காப்பி போட்டுக் கொடுக்கணும்" என்று சொல்லிக் கொண்டே புடவைத் தலைப்பால் கண்ணைத் துடைத்துக் கொண்டு மான் குட்டி மாதிரி துள்ளி ஓடினாள் அஞ்சுகம்.

அஞ்சுகத்தையே பார்த்துக் கொண்டிருந்த தங்கம் ஒரு பெருமூச்சு விட்டு விட்டு தன்னுடைய வீட்டு வேலைகளைக் கவனிக்கப் போனாள்.

★

ரெங்கராஜன் முனிசிபல் ஆபீஸில் ஒரு சாதாரண குமாஸ்தா தான்; இருந்தாலும் மிகவும் கண்ணியமானவன்.

ரெங்கராஜன் இளம் வயதிலேயே தந்தையை இழந்தவன். தாயின் எல்லையற்ற அன்பில் வளர்ந்தவன். உலகத்தில் அவன் யாருடைய வார்த்தைக்கும் கட்டுப்படமாட்டான். ஆனால் அவனுடைய தாயார் எதையாவது சொன்னால் அதற்காகத் தன் உயிரையே விடத் தயாராக இருப்பான். அப்படி அவன் தன் தாயின் பேச்சைக் கேட்டதனால் தான் அஞ்சுகம் அடுத்த வீட்டுத் தங்கத்திடம் சென்று ரெங்கராஜனைப் பற்றிக் குறை சொல்லும்படி நேரிட்டது.

ரெங்கராஜனுடைய தாய் தன் தமையனின் பெண் அஞ்சுகத்தை எப்படியாவது தன் பிள்ளைக்குக் கலியாணம் செய்துவிட வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்றாள். இந்தக் கலியாணத்தை அவன் விரும்பவே இல்லை.

"இப்போதெல்லாம் அப்படித்தான் சொல்லுவாய். அப்புறம் உன் பெண்டாட்டி பேச்சைக் கேட்டுக்கொண்டு ஆடுவாய்" என்று சொல்லி விட்டு அழ ஆரம்பித்து விட்டாள்.

தன் தாயின் கண்களில் கண்ணீரைக் கண்ட ரெங்கராஜன் "ஏதோ அவசரத்தில் சொல்லி விட்டேன் அம்மா! இந்த மாதத்திலேயே கலியாணத்தை முடித்து விட ஏற்பாடு செய்துவிடு" என்று சொல்லி விட்டான்.



கலியாணம்தான் ஆனதே ஒழிய ரெங்கராஜனின் தாய்க்குக் கவலை விட்டபாடாயில்லை. ரெங்கராஜனின் போக்கு அவளுக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. கவலையே உருவாய் உட்கார்ந்து கொண்டிருந்த அஞ்சுகத்தை ஆசையோடு கூப்பிட்டு அவள் தலையை வாரிவிட்டு, "கவலைப் படாதே அம்மா. நான் இருக்கும்போது உனக்கு என்ன கவலை? போ, சாப்பிடு" என்று அன்போடு சொன்னாள். அந்த சமயத்தில் உள்ளே

துழைந்த ரெங்கராஜனைக் கண்டவுடன் அவன் தாய்க்குச் சொல்ல முடியாத கோபம் வந்து விட்டது.

சாப்பிடட்டும் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று பேசாமல் இருந்தாள். ரெங்கராஜன் சாப்பிட்டுவிட்டு வேகமாக எங்கேயோ கிளம்பினான்.

"ராஜா!"

இவ்வளவு கோபமாக அவன் தாயார் ரெங்கராஜனைக் கூப்பிட்டதில்லை.

அவனும் சற்றுக் கடுமையாகவே "ஏன்?" என்று கேட்டான்.

"நான் ஒன்று சொல்கிறேன் கேட்பாயா, மாட்டாயா?"

"ஏன் அம்மா! நீ சொன்னதை நான் என்றுவது தட்டினது உண்டா? உனக்காக நான் எனக்குப் பிடிக்காத கலியாணத்தையே செய்து கொண்டேனே!" என்றான்.

"கலியாணத்தைப் பண்ணிக் கொண்டு தான் என்னைக் கஷ்டப்படுத்திவிட்டாய். நீ ஒரு நாளாவது அஞ்சுகத்தினிடம் பேசினதை நான் பார்த்ததே இல்லை. அவளிடம் ஏன் 'கடுகடு' என்றிருக்கிறாய்? குழந்தையிடம் ஒரு நாளாவது சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தால் என்ன வந்துவிடும்? அவளுக்குச் சந்தோஷமே இல்லாமல் செய்துவிட்டாயே! சதாகாலமும் உன் அன்புக்காகத் தவம் கிடக்கிறாள் அஞ்சுகம். ஏன் அவளிடம் வெறுப்புக் காண்பிக்கிறாய்?"

தாயார் சொன்னதெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று. ரெங்கராஜன் அதைக் காதில் போட்டுக் கொண்டால்தானே!

அன்று அத்துடன் முடிந்த சமாசாரம் அப்படியே நின்றுவிடவில்லை. ரெங்கராஜன் தாயார் அதை நிற்க விட்டால் தானே! மேலும் மேலும் தொடர்ந்து ரெங்கராஜனிடம் அஞ்சுகத்தின் அன்பையும் அவள் தன் கணவனிடம் அதைப் பெறுததால் அவளடையும் துன்பத்தையும் பற்றிக் கூறி அவனைக் கரைத்தாள். 'கரைப்பவர் கரைத்தால் கல்லும் கரையும்' என்னும் பழமொழி பொய்யாகுமா? ரெங்கராஜன் கல்லா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அவன் மனம் கரைந்தது என்னவோ உண்மை. இது நாள் வரையில் அஞ்சுகத்தின் விஷயத்தில் அடைபட்டுக் கிடந்த அவன் இருதயம் இப்பொழுது திடீரென்று திறந்து கொண்டது; அஞ்சுகத்தின் உண்மை அன்புக்கு ஏங்க ஆரம்பித்துவிட்டது; அஞ்சுகத்தின் குறையும் தீர்ந்தது.

அஞ்சுகமும்ரெங்கராஜனும் அன்புருவமாக மாறி ஆனந்தமாக இருக்க ஆரம்பித்த பிறகுதான் அந்த மாறுதல் நிகழ்ந்தது. ரெங்கராஜன்—அஞ்சுகம் இவர்களிடத்தில் வளர்ந்த அன்பு ரெங்கராஜன் தாயார் மனத்தில் ஒரு பொறாமைத் தீயை வளர்த்தது. ரெங்கராஜன் தாயாருக்கு இப்பொழுதுதான், தான் அஞ்சுகத்தின் மாமியார் என்பது ஞாபகத்துக்கு வந்தது.

"தங்கம், நான் என்னடி சொல்லுவேன்? அஞ்சுகத்தின் ராங்கியை என்னவென்று சொல்லுவது? எடுத்ததற்கெல்லாம் அவனிடம் கோள்சொல்லிக் கொடுக்கிறாள். அவன் குடித்தனம் பண்ண ஆரம்பித்ததிலிருந்து வீட்டில் ஏகப்பட்ட செலவு. அவனிடம் இதைப் பற்றி வாயைத் திறக்க முடியவில்லை. அஞ்சுகத்தைப் பற்றி ஏதாவது ஆரம்பித்தால் போதும்! அவனுக்கு வருகிற கோபத்தைப் பார்க்க வேண்டுமே! அவன் ஏன் என்று கேட்காதபோது, அவள் அடங்கிக் கிடந்தாள். இப்பொழுதோ அவளுக்கு அவன் சலுகை இருக்கு! இனி மேல் என்னைக் கவனிப்பார் யார்?" என்று கூறிவிட்டுத் தேம்பித் தேம்பி அழுதாள் ரெங்கராஜனின் தாயார்.

தங்கத்துக்கு ஒன்றும் புரியவில்லை. முன்பு ரெங்கராஜனும் அஞ்சுகமும் ஒன்று சேர்ந்திருக்க வேண்டுமே என்று ஏங்கிக் கொண்டிருந்த அவன் தாயார் வர வர மாறி இப்படிப் பொறுமைப் படுகிறாளே! ஆம், அவள் வர வர மாமியார் தானே! என்ன உலகம் இது!





# அடுத்த வீட்டு ஜன்னல்

நாடோடி



“என்ன ஸார்! புது வீட்டுக்குக் குடி போய் விட்டேளாமே! வீடு ரொம்ப சௌக்கியமோ!”

“ஆமாம். ரொம்ப சௌக்கியம்”

“என்ன! தெற்குப் பார்த்த வீடோ! காற்று ஜிலு, ஜிலு என்று அடிக்கிறதோ?”

“காற்று? மூச்சு விடக்கூடாது. வடக்குப் பார்த்த வீடாய் இருப்பதால் துளிக்காற்று கூட கிடையாது. ராத்திரி வேளைகளில் காற்றில்லாமல் தூங்க முடியாமல் விசிறி, விசிறி கை உடைந்து போகிறது.”

“குழாயிலாவது ஜலம் நன்றாக வந்து கொண்டிருக்கிறதா?”

“நாசமாய்ப் போச்சு! எங்காத்துக் காரரும் ஆபீசுக்குப் போகிறார் என்பது போல் குழாய் ஒன்று அழுக்கு தருகிறதே ஒழிய, ஜலம் அருணஜலம்தான்.”

“கிணற்று ஜலமாவது நன்றாக இருக்கிறதா?”

“அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறீர்? கிணற்று ஜலம் வாயில் வைக்க வழங்காது.”

“வீடாவது பார்க்க அழகாக இருக்கிறதா!”

“அழகா! பாழடைந்த பங்களா எதையாவது பார்க்க வேண்டுமானால் எங்கள் வீட்டைப் பார்த்தால்போதும்.”

“பின், வீடு ரொம்ப சௌக்கியம் என்றீரே! என்ன சௌக்கியம்?” என்று நண்பர் கேட்டார்.

“அந்தக் கேள்விக்குத்தான் நான் இக்கட்டுரையில் பதில் அளிக்கப் போகிறேன்.”

**மா**மியார் இல்லாமல், புருஷனும், மனைவியும் தனிக் குடித்தனம் நடத்துவதில் உள்ள இடைஞ்சல்கள் தனிக் குடித்தனம் நடத்தும் புருஷர்களைக் கேட்டால்தான் தெரியும். மாமியார் மாட்டுப் பெண்ணைப் பிடுங்கிக் கொண்டே இருப்பதைப் பார்க்கும் போது ஒவ்வொரு சமயம் தனிக் குடித்தனம் நடத்த மாட்டோமா என்று எல்லாருக்கும் தோன்றுவது இயல்பே.

ஒரு சமயம் என் தாயார் என்னிடம் கோபித்துக்கொண்டு ஊருக்குப் போய் விடவே நான் சரசுவுடன் தனிக் குடித்தனம் நடத்த வேண்டி வந்து விட்டது!

முதலில் நான்கு நாட்கள் நிம்மதியாகத்தான் இருந்தது. ஆனால் நாட்கள் செல்லச் செல்ல, வீட்டில் நிலைமை மாறிக் கொண்டே வந்தது. சரசு என்னிடம் கொண்டிருந்த பக்தியும், மரியாதையும் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வந்தது.

என் தாயார் என்னுடன்கூட இருந்த போது சரசு என்னை ஒரு காரியமும் செய்ய விடுவதில்லை. நான் காலையில் படுக்கையை விட்டு எழுந்ததிலிருந்து ராத்திரி படுக்கப் போகும் வரை ஏதோ மகாராஜாவுக்கு உபசாரங்கள் நடப்பதுபோல் எனக்கு நடக்கும்.

பல் தேய்க்கப் போனால் டூத் பிரஷ்ஷும், பேஸ்டும் தயாராகக் காத்துக் கொண்டிருக்கும். என் அறைக்குள் நுழைந்தால் காப்பி தயாராக மேஜையில் காத்துக் கொண்டிருக்கும். காப்பி சாப்பிட்டு விட்டு, பத்திரிகை படித்து விட்டு, வெந்நீர் அறைக்குள் நுழைந்தால் வெந்நீர், டவல், சோப்பு எல்லாம் தயாராக எடுத்து வைக்கப் பட்டிருக்கும்.

இப்படியாகத் தானே ஒரு காரியமாவது நான் வாய்விட்டு வேண்டும் என்று கேட்கும்படியாக இருக்காது. வீட்டில் நான் ஊமைபோலவே இருந்து வந்தேன்.

இத்தனை சிசுருஷைகளையும் சரசுதான் செய்து வைப்பாள். மாமியாருக்குப் பயந்து கொண்டுதான் செய்தாளா, அல்லது என்மேலுள்ள அன்பினால்தான் அப்படிச் செய்தாளா என்பதை சரசுவைத்தான் கேட்க வேண்டும். என் மேலுள்ள அன்பினால் தான் என் தாயார்

# கடன் தீர்ந்தது




சரசுவை ஏவினாளா, அல்லது மாட்டுப் பெண் உழைக்கட்டுமே என்று தான் சரசுவை அதிகாரம் பண்ணினாளா என்று என் தாயாரைத் தான் கேட்க வேண்டும்.

ஆனால் தனிக் குடித்தனம் பண்ண ஆரம்பித்தாலும் ஆரம்பித்தேன், இந்தச் சௌகரியங்கள் எல்லாம் கொஞ்சங் கொஞ்சமாக எனக்குக் குறைய ஆரம்பித்து விட்டன. ஊமையாக இருந்தவன், வாயைத் திறந்து பேச வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. "அது வேண்டும், இது வேண்டும்" என்று வாய்விட்டுக் கேட்க வேண்டியதாகி விட்டது.

"இந்தாங்கோ! உங்களைத்தானே! கொஞ்சம் இங்கே வந்துதான் காப்பியைக் குடித்து விட்டுப் போங்களேன்" என்று சொல்ல சரசு முதல் தான் தொடங்கினாள்.

சரி, போனால் போகிறாள், என்று நான் அவளுக்கு இடம் கொடுத்ததுதான் தாமதம், கொஞ்சம் கொஞ்சமாக மடத்தைப் பிடுங்கிக் கொண்டு விட்டாள். சரசு எனக்கு சிச்ருஷைகள் செய்து கொண்டிருந்தது போய், நான் அவளுக்கு சிச்ருஷைகள் செய்ய வேண்டிய நிலைமை இப்பொழுது ஏற்பட்டு விட்டது!

இதற்காக நான் என் தாயாரை உடனே ஊரிலிருந்து புறப்பட்டு வரும்படி தந்தி யடித்தேன். ஆனால் வர முடியாது என்று என் தாயார் பதில் தந்தி அடித்துவிடவே எனக்கு என்ன செய்வதென்று ஒன்றுமே தெரியவில்லை.

இந்தச் சமயத்தில்தான் எனக்குப் புது வீடு கிடைத்தது. ஜனங்கள் பொதுவாகச் சௌகரியங்கள் என்று கருதும் காற்று, ஜலம், இடம் முதலிய வசதிகள் அதில் இல்லாவிட்டாலும் அதில் ஒரு முக்கியமான சௌகரியம் இருக்கிறது என்பது பின்னால்தான் தெரிந்தது.

நான் குடியிருக்கும் வீட்டில், வீட்டின் கிழக்குப் புறமாக ஒரு ஜன்னல் இருக்கிறது. அதை எதிர்த்தாற் போல் பக்கத்து வீட்டில் மேற்குப் புறமாக ஒரு ஜன்னல் இருக்கிறது.

பக்கத்து வீட்டு ஜன்னலிலிருந்து பார்த்தால் எங்கள் வீட்டில் நடப்பது எல்லாம் தெரியும். நானும் சரசுவும் சௌஜன்யமாக இருக்கிறோமா, அல்லது சண்டை போட்டுக் கொண்டிருக்கிறோமா, தினம் காலையில் எழுந்ததும், வெந்நீர் அடுப்பை மூட்டுவது நானா, சரசுவா, எங்கள் குழந்தை அனுவை (அனுராதாவைத் தான் நாங்கள் அனு என்று கூப்பிடுகிறோம்) தொட்டிலில் போட்டு ஆட்டும் பொறுப்பு என்னைச் சேர்ந்ததா, சரசுவைச் சேர்ந்ததா ஆகிய சகல விஷயங்களும் அடுத்த வீட்டு ஜன்னலிலிருந்து பார்த்தால் தெரியும்.

இதனால்தானோ என்னமோ, எப்பொழுது பார்த்தாலும் அடுத்த வீட்டு ஜன்னலில் ஓர் உருவம் எங்கள் வீட்டு ஜன்னல் பக்கமே பார்த்துக் கொண்டு நின்று கொண்டிருக்கிறது.

அந்த உருவத்துக்கு, நம்மைப்போல் சாப்பாடு, தூக்கம் முதலியவை அவசியம் இல்லைபோல் தோன்றுகிறது. ஏனெனில் நான் பார்க்கும் போதெல்லாம் அந்த உருவம் அங்கேயே நின்று கொண்டிருக்கிறது.

நான் இந்த வீட்டுக்குக் குடி வந்த புதிதில் அந்த உருவத்தைக் கவனிக்கவே இல்லை. அப்படி ஒரு உருவம் அங்கு நிற்பதாகவும் யாரும் எனக்கு எச்ச

ரிக்கை செய்யவும் இல்லை. நான் மாட்டில் தன்னந்தனிக் காட்டில் தனிக் காட்டு ராஜாவாக விளங்குவதுபோல் நினைத்துக் கொண்டு லக்ஷ்மி காலால் இட்ட வேலையை எல்லாம் தலையால் செய்து வந்தேன். தினம் எழுந்ததும் வெந்நீர் அடுப்பை மூட்டி வந்தேன். குழந்தை மாலாவைக் குளிப்பாட்டி, புட்டிப் பாலைக் கொடுத்து வந்தேன். வீட்டில் சாமான் பண்டங்களை அங்கங்கே ஒழுங்காக எடுத்து வைத்து வந்தேன். நானே கிணற்றில் ஜலம் இழுத்துக் குளித்து வந்தேன். இப்படியாகத் தானே லக்ஷ்மி எனக்கு முன்பு செய்து வந்த சிச்ருஷைகளை யெல்லாம் நானே எனக்குச் செய்து கொண்டதோடு, நடுவில் லக்ஷ்மிக்கும் சிச்ருஷைகள் செய்து வந்தேன்.

ஒருநாள் மாலா எதற்காகவோ 'ஹோ' என்று கதறிக் கொண்டிருந்தாள். "குழந்தை கதறிக்கொண்டிருக்கிறது. நீங்கள் கவனிக்காமல் வாயை மூடிக் கொண்டிருக்கிறீர்களே" என்று லக்ஷ்மி சற்று அதிகார தோரணையில் கத்தினாள். உடனே பயந்து, குழந்தை மாலாவை எடுத்து வைத்துக்கொண்டு கொஞ்ச ஆரம்பித்தேன்.

அப்பொழுது 'களுக்' கென்று யாரோ சிரிக்கும் சப்தம் கேட்டது. நான் மாலாவைச் சமாதானப் படுத்தும் அழகைக் கண்டு லக்ஷ்மிதான் சிரிக்கிறாளாக்கும் என்று நினைத்துக்கொண்டு, லக்ஷ்மியைப் பார்த்துச் சற்று கோபமாகவே, "எதற்காகச் சிரித்தாய்?" என்று கேட்டேன்.

"நான் எங்கே சிரித்தேன்!" என்று லக்ஷ்மி சொன்னதும் திரும்பிப் பார்த்தேன். திரும்பிப் பார்த்தால் பக்கத்து வீட்டு ஜன்னலில் ஒரு உருவம் நின்று கொண்டிருந்தது! அந்த உருவம் முகத்தை வைத்துக்கொண்ட கோணலிலிருந்து அதுதான் சிரித்தது என்று தெரிந்தது!

அடுத்த வீட்டு ஜன்னலில் ஒரு உருவம் நின்று கொண்டிருந்ததை லக்ஷ்மியும் பார்த்தாள். கண்டதும் மாமியாரைக் கண்ட மாட்டுப் பெண்ணைப்போல் நடுங்கினாள்!

அடுத்த வீட்டு ஜன்னலில் அந்த உருவம் எப்பொழுது பார்த்தாலும் நிற்கிறது, நம் வீட்டில் நடக்கும் காரியங்களை யெல்லாம் கண் கொட்டாமல் கவனிக்கிறது என்று தெரிந்ததும் லக்ஷ்மியின் நடத்தையில் திடீரென்று ஒரு மாறுதல் ஏற்பட்டு விட்டது. என் தாயார் இருந்தபோது எப்படி ஓடி, ஆடி எனக்குச் சிச்ருஷைகள் செய்வாளோ அந்த மாதிரி செய்யத் தொடங்கினாள்.

நான் காப்பியைத் தேடிக்கொண்டு சமையலறைக்குப் போகவேண்டிய வேலை நின்றது. நானே வெந்நீர் அடுப்பை மூட்டும் வேலை நின்றது. இப்படியாகத் தானே பழையபடி மெள்ள மெள்ளத் திரும்பி வந்து விட்டது.

இத்தனை சௌகரியங்களும் அந்த அடுத்த வீட்டு ஜன்னலினாலும், அங்கு நின்றுகொண்டிருந்த உருவத்தினாலும் ஏற்பட்டது என்று நினைக்கும்போது, அந்த அடுத்த வீட்டு ஜன்னலை வாழ்த்துவதா, அல்லது பசி, தாகம், தூக்கம் ஒன்றையும் பாராமல் எப்பொழுது பார்த்தாலும் அங்கு நின்றுகொண்டிருக்கும் உருவத்தை வாழ்த்துவதா, அல்லது நான் குடி போயிருக்கும் புது வீட்டை வாழ்த்துவதா என்று தெரியவில்லை.

புது வீட்டுக்குக் குடிபோனதன் பலனாக, லக்ஷ்மிக்கு நான் வேலை செய்து கொண்டிருந்தது போய், லக்ஷ்மி எனக்கு வேலை செய்ய ஆரம்பித்திருக்கும்போது, புது வீடு சௌகரியமாக இருக்கிறது என்று சொல்லாமல் வேறு என்ன சொல்வது?

இப்பொழுது தான் உடனே ஊருக்குப் புறப்பட்டு வரப் போவதாக என் தாயாரிட மிருந்து தந்தி வந்திருக்கிறது. அதற்கு நான் பின் கண்ட பதில் தந்தி அடித்து விட்டேன்.

"அம்மாளுக்கு நமஸ்காரம். தயவு செய்து இங்கு வரவேண்டாம். லக்ஷ்மிக்கு இங்கு ஒரு புது மாமியார் கிடைத்து விட்டாள். அந்த மாமியார் அடுத்த வீட்டு ஜன்னலில் இருந்து கொண்டே லக்ஷ்மியைக் கவனித்துக் கொள்கிறாள். ஆகவே மாமியார் இல்லாமல் மாட்டுப் பெண் சோம்பேறியாய்ப் போய்விடுவாளே என்று நீங்கள் இங்கு வரவேண்டாம்."





அது மிகவும் குளிர்ச்சியாக இருக்கிறதல்லவா!

... ஆம், களைப்பையும் போக்குகிறது!

... அதுமட்டுமா — ஆனந்தத்தையும் அளிக்கிறது!

தினசரி வினோலியா சோப்பை உபயோகித்து சுகத்தை விரும்பும் மனிதர்களைக் கேளுங்கள். அவர்கள் இது மிகவும் ஆச்சர்யமாக சுகமளிக்கும் என்றும், கோடைகாலத்தில் ஓர் சிறந்த வரம் போன்ற தென்றும் சொல்லுவார்கள். அதனுடைய வெண்மையான நுரை குளிர்ச்சியையும், மலர்ச்சியையும் கொடுக்கிறது. அதனுடைய பிரத்தியேகமான வாசனை குதூகலத்தை அளிக்கிறது. மிகவும் களைப்படைந்த நரம்புகளுக்கு உத்ஸாகத்தை ஊட்டுகிறது.




**வினோலியா**
**ஒயிட் ரோஸ் ஸோப்பு**

VWR. 18-50 TM    VINOLIA CO., LIMITED, LONDON, ENGLAND




# நல்ல உயர்ந்த பண்டங்களையே விரும்புவோருக்கு

நமக்குக் கட்டாவிடினும் நம்மில் எல்லோரும் மேன்மையான பண்டங்களையே விரும்புகிறோம். சிகரெட்டில் சிறந்த புகையிலையை உபயோகித்தால்தான் அது விரும்பிப் பலராலும் சிறந்ததென்று சொல்லப்படும். டிலக்ஸ் டெனர் சிகரெட் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. பலரும் வாங்கி ஆனந்தமாக அனுபவிக்கலாம். உத்தரவாதமுள்ள 100% வர்ஜீனியா புகையிலைகளாலேதான் டிலக்ஸ் டெனர் சிகரெட்டுகள் செய்யப்படுகின்றன.

டி லக்ஸ் டெனர் சிகரெட்டு

ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**Tenor**

**Is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD, LONDON. EASTERN LICENCEES, POST BOX No. 470, CALCUTTA

# ஆரம்ப நடை



அவன் இன்று உங்கள் வளர்ந்த கையைப் பிடித்துக் கொண்டு நடக்கப் பயிலுகிறான். வாழ்க்கையில் காலுக்கு வேறு விதமான ஆதாரத்தை நாடுவான். பிருத்வியின் குழந்தைக்கான சேமிப்பு அஷ்யூரன்ஸ் பாலிஸி ஒன்று அதற்கு உதவியளிக்கும். உங்களது குழந்தையின் எதிர்கால வாழ்க்கை சந்தோஷமாக இருக்க இப்போதே ஏற்பாடு செய்யுங்கள்.

இரண்டு வயதுள்ள ஒரு பையனுக்காக வருஷம் ஒன்றுக்கு ரூபாய் நூறு கட்டினால், அவனது 21வது வயதில் ரூ. 8,080-க்கு ஒரு எண்டௌமெண்ட் அஷ்யூரன்ஸ் அல்லது ரொக்கமாக ரூ. 2184 கிடைக்கும்.

**பிருத்வி**

**இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிட்.**

120, அரமனேகாரன் தெரு, சென்னை

எல்லா வித இன்ஷ்யூரன்ஸ் திட்டங்களுக்கும்

நகைச்சுவை அரசு

## திரு N. S. கிருஷ்ணன் அவர்களின்

## மதுரை ஸ்ரீ மங்கள பாலகான சபையாரால்

சென்னை

# ஒற்றைவாடை தியேட்டரில்

## 30-9-44 முதல் வெற்றிகரமான 4-வது வாரம்

"பூம்பாவை" புகழ்

## K. R. ராமசாமி

நடிக்கும்

# மனோஹரா

(நாடகம்)



★

திங்கள்தோறும்
நாடகம் கிடையாது.

பிரதி செவ்வாய், வியாழன், சனி இரவு 9-30 மணிக்கும்
பிரதி ஞாயிறு, புதன், வெள்ளி மாலை 6-30 மணிக்கும்

சனி, ஞாயிறுகளில் காம்பிளிமெண்டரி டிக்கட் செல்லாது

டிக்கட்டு விபரம்: ரூ. 3-0-0, 1-12-0, 1-2-0, 0-9-0, 0-4-6

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.